WWW.AKARAM.EU

இலவச தமிழ் மாத இதழ்



# AKARAM
# அகரம்

14. கார்த்திகை - 13.மார்கழி 2012

சுவடி: 1.07 | திருவள்ளுவர் ஆண்டு 2043 | நந்தன வருடம்

## நவம்பர் 27

### "உரிமையோடு சுடரேற்றி உறுதி எடுக்கும் உன்னதமான நாள்"!

**FREE Magazine**





**FREE CIRCULATION:**

GERMANY, SWITZERLAND, FRANCE, ENGLAND, DENMARK, NORWAY, HOLLAND, SWEDEN, ITALY, CANADA

# தேசிய மாவீரர் நாள் 2012

## வெல்லாமல் வீழோம்...



நடுச்சாமம் தாண்டியதை
நாய்கள் அறியவில்லைப்போல....
ஊளை இன்னும்
ஓய்ந்திருக்கவில்லை,

காற்றுவெளியின் நடுவில்
கற்கள் சூழ்ந்த குடிசை அது.
கதவிற்குக் கல்லால்
எறிந்தேன்..

தம்பியே...?
தயவுக்குரல் ஒலித்தது.
அம்மா இப்போதெல்லாம்
அயர்வதேயில்லை..

அண்ணாவின் வீரச்சாவிற்குப் பின்பு...,
அப்பா காணமல் போன பின்பு...,
அத்தானிற்குக் காலில்லாமல் போய்
அக்காவே வேலைக்குப்
போகத்தொடங்கிய பின்பு..
அம்மாவின் தூக்கம்
தொலைந்தாயிற்று..!

ஓமணை... நான் தான்...,
ஒண்டும் இல்லையேணை....?
ஒரு கிழமையாய்
ஒழுங்காச் சாப்பிடேல்லை..!

என்னய்யா, உது கோலம்..?
என்ர தம்பிரானே..
ஏனப்பு உன்ர இடத்தில
ஏதும் சமைக்கிறேல்லையே...!

எணேய்....
எங்களுக்குக் குளிக்கவே
எட்டுக்கட்டை நடக்கவேணும்..
சமையலோ...?

"கொஞ்சம் பொறப்பு...
குத்தரிசிச் சோறும்
குளத்து மீன் கறியும்
இரண்டு நிமிசத்தில
இறக்கித் தாறன்" ....



சுடுசோறும் கறியும்
உரமேற்றிய நொடியிலேயே - மீளவும்
நாய்களின் ஒலம்

நான் எழுந்தேன்..
அம்மாவின் கண்களை
அப்பியது இருள் கலந்த பயம்...

"தரித்திரங்கள் வருகுது போல...
தம்பி வெளிக்கிடைய்யா...
மற்றப்பிள்ளையளுக்கும் குடு" என
மற்றுமொரு பொதி....

இரவில் என்னை
இறுக்கி அணைத்துத் தூங்கும் அம்மா..,
இன்று கலைக்கிறாள்....

விழிகளால் அம்மாவை
வினவினேன்..

"சும்மா சாகக்கூடாதப்பு..
எங்களை அழிச்சவனை அழிக்கும்வரைக்கும்
நீ கவனமப்பு" ...
மாவீரர் கண்ட கனவுக்காகவாவது
மண்ணை மீட்கோணுமப்பு...

அம்மாவின் உணவு மட்டுமல்ல ...,
உறுதியும் ஒட்டிக்கொண்டது..

காட்டை நோக்கி
கால்கள் நடந்தன...

மனசு சொல்லிக்கொண்டது -
மண்ணை மீட்கவேணும்...!!!

– தேவன்–



அகரம்

மாதாந்த இதழ் - Monthly Magazine

14. கார்த்திகை - 13. மார்கழி
சுவடி 1.07

தலைமை ஆசிரியர்:
திரு. த. இரவீந்திரன்

உதவி ஆசிரியர்:
திரு. வன்னித்தம்பி

ஆசிரியர் குழு:
திரு. பவித்திரன் (இலங்கை)
திரு. தயாபரன் (இலங்கை)
திரு. வண்ணை தெய்வம் (பிரான்ஸ்)
திரு. எதிர்மன்னசிங்கம் (சுவிஸ்)
திரு. சண் தவராஜா (சுவிஸ்)
திரு. அறிவழகன் (ஜேர்மனி)

நிழற்படப்பிரிவு:
திரு. வியாசன்
செல்வி. கயல்விழி

ஒப்பு நோக்குனர்:
திருமதி. தாமரைச்செல்வி (ஜேர்மனி)
திரு. அர்ஜுன் (ஜேர்மனி)

தொடர்புகளுக்கு:
tMedia Network
PO. BOX 4153, 59037 Hamm
Germany
Tel: 00 49 23 81 98 77 897
Fax: 00 49 23 81 97 25 556
Email: ***editor@akaram.eu***

www.akaram.eu



# நுழைவாயில்...

அகரம் வாசகர்களுக்கு வணக்கம்,

இது மாவீரர் நினைவேந்தல் காணும் மாதம். கடந்த காலங்களைப் போன்றே மக்கள் கனத்த இதய வலியோடு ஒருமித்த தலைமை இல்லாத நிலைகண்டு கலங்கித் தவிக்கிறது. இந்தியாவில் தமிழீழ விடுதலைப் புலிகளின் தடைக்கு எதிராக சுவிஸில் இருந்து சிவநேசன் என்பவர் பெயரால் சென்னை நீதிமன்றத்தில் வழக்கு பதிவாகி இருப்பதான செய்தி நிலைமையில் ஒரு திருப்பம் ஏற்படலாம் என்ற நினைப்பு சற்று ஆறுதலாக இருக்கிறது.

புலிகள் இயக்கம் பிளவுபட்ட நிலையில் மக்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றத் தவறி வருவது எமது இனத்தின் அரசியல் வருங்காலம் பற்றிய கவலையே அதிகரிக்கிறது. எனியும் சிதறிக் கிடக்கும் தலைமையால் தமிழினம் நன்மை அடையமுடியாது என்ற உண்மையை அனைத்துத் தரப்பும் புரிந்து ஒன்றிணைந்த அரசியல் வேலைத் திட்டத்தின் மூலம் மக்களை வழிநடத்த முன்வரவேண்டும்.

ஜெனிவா ஐ.நா.சபையின் மனித உரிமைகள் ஆணையத்தின் அகில உலக மனித உரிமைகள் மீறல் ஆய்வுக்கு உள்ளாகி உள்ள இலங்கை அரசு 99 உலக அரசு களின் கவனத்தையும் கண்டனத்தையும் எதிர்கொள்வது பலரையும் புளகாங்கிதம் கொள்ள வைக்கிறது. இந்த அற்ப சந்தோசத்தில் மழை வெள்ளத்தால் அவதி உறும் எமது உறவுகளின் மிகப் பெருந் துயரை மறந்துவிடும் கொடுமையும் நடக்கிறது.

ஆனந்த விகடனில் வெளியான முன்னாள் பெண் போராளியின் நேரடிக் குரல் பதிவுடன் கூடிய சாட்சியம் அங்கு நிலைமை எத்தனை மோசமாக உள்ளது என்பதை உணர வைக்கிறது. இதனை அரசின் பிரச்சாரமாக எடுத்து முற்றாகப் புறந்தள்ளும் முயற்சிகளும் பலமாக உள்ளன. ஆனால் அடக்கு முறை இராணுவ ஆட்சியில் இவை போன்ற எதுவும் நடக்காது என வாதிடுவது சுத்த அபத்தமாகும்.

எமது அரசியல் தலைமை அங்கே மக்கள் நலன் பாதுகாப்பு பற்றிய விடயங்களுக்கு முக்கியம் அளிக்காது அரசியல் தீர்வு பற்றியே பேசிப் பேசிக் காலத்தைக் கடத்து கிறது. விடுதலைப் புலிகள் அரசோடு நடத்திய அமைதிப் பேச்சுகளின் போது அரசியல் தீர்வுக்கு முன்னோடியாக மக்களின் அன்றாடப் பிரச்சிகைளுக்கான தீர்வையே பேசி னார்கள். தம்மை அறிவு ஜீவிகளாகக் கருதிக் கொண்டும் தாமே தமிழ் மக்களின் ஏகப் பிரதிநிதிகள் என்றும் அரசியல் தலைமைக்கு முதலில் மக்களின் துயர் தீர்க்க வேண்டும் என்கிற ஆர்வமே காண முடியாதிருக்கிறது.

இப்படியான நிலையில் அங்கே பாலியல் வன்கொடு மைகளும் வாழ்வாதாரப் பிரச்சினைகளும் கிடையாது

என வாதிடுவது எப்படி நியாயமாகும்? ஆனந்த விகடனில் பேசிய பெண் போன்று எண்ணற்ற பெண்கள் வாயே திறக்காது மனதுக்குள் வாடி வதங்கி வெம்பிச் சாகும் நிலையே அங்கு இருக்கும் சாத்தியப்பாடே அதிகம். முதலில் அவர்களின் விடுதலைக்கான போராட்டமே முடுக்கிவிடப்பட வேண்டும். அதை புலம் பெயர் மக்களே முன்னின்று செயற்படமுடியும், செயற்பட வேண்டும்.

இலங்கையின் நிதி நிலைமையை விட நீதித் துறையின் நிலை மேலும் மோசமடைந்து காணப்படுகிறது. இவை பற்றி நாம் கவலை கொள்வதை விட எமக்குப் பாதகமாகச் செயற்படும் இத்துறைகள் எக்கேடு கெட்டாலும் எமக்கென்ன என்று இருப்பதே நல்லது. ஏனென்றால் சுனாமி மீளமைப்பு கட்டமைப்பையும் வடக்கு கிழக்கு மாகாண இணைவையும் 13வது திருத்தச் சட்டத்தையும் தமிழருக்கு பாதகமகச் செயற்பட வைத்தவர் முன்னாள் பிரதம நீதி அரசர்.

இன்றைய நீதிஅரசர் கூட ஒன்றும் புனிதரல்ல. குறுக்கு வழியில் நியமனம் பெற்றவர் இப்போ அவரை யார் நியமித்தாரோ யாருக்காக நியமித்தாரோ அவரே பதவி நீக்கம் செய்ய முற்படுகிறார். இதில் நாம் கவலைப்பட என்ன இருக்கிறது?

இதே போன்றே 13வது திருத்தச் சட்டத்திலும் எமக்கு ஏற்புடையதான விதிகள் எல்லாம் அகற்றப் பட்டு வெறும் சக்கையும் கோதுமே எஞ்சி உள்ள நிலையில் எதற்காக இருக்க வேண்டும்? ஆனால் முழுமையாகத் தர முனைந்த போதே வேண்டாம் என எதிர்ப்புக் காட்டிய தமிழர் தலைமை இன்று அதனைச் சட்டப் புத்தகத்திலிருந்து அகற்ற வேண்டும் எனச் சிங்கள அரசு முற்படும் போது வேண்டாம் எனக் கோருவது தமிழரின் அரசியல் நிலைப்பாடு பற்றிய குழப்பத்தையே காட்டுகிறது.

உலகமே நிதி நெருக்கடியில் மூச்சுத் திணறும் போது அகரத்தின் நிலை மட்டும் எப்படி நிறைவாக இருக்க முடியும்.

வாசகர் தமக்குத் தெரிந்த வர்த்தகரிடம் எமக்கு விளம்பரம் பெற்றுத் தந்தாலே எமது பயணத்தைச் சிக்கலின்றித் தொடர முடியும். நீங்கள் செய்ய வேண்டியது உங்கள் வர்த்தக நண்பரிடம் பேசிவிட்டு எமக்கு அவரது தொலபேசி எவ்ணைத் தெரிவித்தாலே போதும். மீதியை நாம் பார்த்துக் கொள்வோம்.

எமது வாசக மற்றும் வர்த்தகப் பெருமக்களுக்கு எமது வாழ்த்துகளும் நன்றி கலந்த வணக்கமும் தெரிவித்து விடை பெறுகிறோம்

அகரம் குழுமம்!

*பி.கு. தீவாவளி வாழ்த்துக்கள் இல்லையா என நீங்கள் கேட்பது தெரிகிறது. இது எமது மாவீரரின் நினைவுகளைச் சுமக்கும் மாதம். நாம் தமிழராய், ஈழத் தமிழராய் எம்மை அடையாளப் படுத்துவோமா? நன்றி, வணக்கம்.*




# விதி
# சதி
# புலி
# கிலி
# புவியைப் படுத்தும் பாடு!

**த. எதிர்மன்னசிங்கம்**

இது என்ன தலைப்பு என்னும் கேள்வி படிப்பவரையும் குழப்பத்தில் ஆழ்த்தி விடலாம். வியப்படையாதீர்கள் உலகம் முழுவதுமாக இப்படித்தான் குழம்பிக் கிடக்கிறது. இன்னும் சொல்வதானால் இந்தப் பூமியே குழம்பிவிடுமோ என்ற புரளியையும் உலகம் சந்தித்து வருகிறது.விதியை யாரால் வெல்ல முடியும். இக்கட்டுரை எழுதப்படும் பொழுது ஒரு 3 வயது அமெரிக்கச் சிறுமி கைத் தொலைபேசியில் அமெரிக்க அதிபர் தேர்தல் முடிவு என்னவாகுமோ என்று தேம்பித் தேம்பி மழலை மொழியில் அழுது பேசும் காட்சியை சீ.என்.என். தொலைக் காட்சி காண்பித்து இந்த தலைப்பு சரிதான் என விதித்து விட்டது.

தமிழரின் சித்தாந்தமாகப் பல்லாண்டு காலமாக விளங்கி வரும் தலைவிதி மறு பிறவி என்பன உலக அளவில் பிற மதத்தவராலும் விஞ்ஞானிகளும் உட்பட இன்று பகிரங்கமாகவே ஏற்பதைக் காண முடிகிறது. தன்வினை தன்னைச் சுடும் ஓட்டப்பம் வீட்டைச் சுடும் எனக் கூறி தமக்குத் தனது சகோதரியே நஞ்சிட்டுக் கொடுத்த அப்பத்தை அதே வீட்டுக் கூரையில் வைத்துவிட வீடு தீப்பற்றி எரிந்து போனதாகக் கதை உண்டு.

சிங்களமும் மகிந்த ராஜபக்ஷேயும் இன்று அவர்களின் வினையே அவர்களைச் சுடும் காலம் அண்மித்து வருகின்றன. தாம் சொன்னதை எல்லாம் வேதமாக உலகம் நம்பிவிட்டது என ஐ.நாவையும் ஐரோப்பிய ஒன்றியத்தையும் இந்தியாவையும் அமெரிக்காவையும் சீனப் பெருஞ்சுவருக்குப் பின்னால் நின்று சண்டி செய்து வெறியாட்டம் போட்ட சிங்களத்தை நோக்கி 90க்கு மேற்பட்ட நாடுகள் சொல்ல முற்படும் சேதி என்ன? தன்வினை தன்னைச் சுடும் என்கிற விதி என்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்?

கேள்விக் கணை போட்ட நாடுகளில் சீனாவும் அடங்குகிறது என்பதைச் சிங்களத்தின் கலிகாலம் என்பதா? கிலிகாலம் என்பதா? இந்த அதிசயம் ஏற்பட சீனத் தூதுவரை த.தே.கூ. சந்தித்துப் பேசியதன் விளைவு எனக் கருதத் தோன்றுகிறது. பல காலமாக நாம் த.தே.கூ. மீது வைத்து வந்த குற்றச்சாட்டு அவர்களுக்கு இந்தியத் தூதரகத்தை தவிர வேறு தூதரகங்கள் இருப்பது தெரியாதா என்பதே. எப்படியோ இப்போதாவது அவர்கள் இதனைத் தாமாகச் செய்தார்களா இல்லையா என்பதை விடவும் செய்தார்களே என்பதற்காக அகரம் பாராட்டுகிறது.

ஆனால் த.தே.கூ. அரசு நீக்கிவிடத் துடிக்கும் 13வது திருத்தச் சட்டத்தை தடுப்பதும் எதிர்ப்பதும் சிங்களம் தனது வழிக்கே தமிழர் தலைவர்களை இழுத்து விட்டது போல் தெரிகிறது.காணி, காவல் துறை, நிதி அதிகாரங்கள் இல்லாத மாகாண சபைக்காகப் போராட வைத்து அதனைக் கொடுத்தே காலத்தால் கரைந்துவிட்ட ஐஸ் பழத்தின் தடியைக் கொடுத்து அழும் பிள்ளையை ஆறுதல் படுத்துவது போல் சிங்களம் எதுவும் கொடுக்காமலே எல்லாம் தந்தாயிற்று என்று தப்பிவிட முடியும். இப்படியான ஒரு முடிவுக்குத் தமிழரின் ஏகப் பிரதிநிதிகள் எனக் கூறிக் கொண்டே த.தே.கூ. செயற்படுவது இனத் துரோகமே.

விதியின் கரங்கள் மனிதனை மட்டும் அல்ல அது பற்றி மக்களுக்குப் போதனை செய்யும் மடாதிபதிகளான மதுரை ஆதீனம் அருணாசலம் சுவாமிகளையும் பீடாதி மடாதிபதி நித்தியானந்தாவையும் நடிகை ரஞ்சிதா மூலமாக பாடாய்ப் படுத்தி மதுரை ஆதீனத்தை அரசு பொறுப்பேற்கும் நிலைக்குத் தள்ளிவிட்டது. நித்தியானந்தாவின் கைக்கு எட்டிய மதுரை ஆதீனம் மட்டும் அல்ல அவரது திருவண்ணாமலை கிரிவல பாதையில் அமைந்துள்ள மடத்தையும் இழந்து கர்நாடகத்தில் உள்ள பீடாதியில் உள்ள மடத்தில் அடைக்கலம் புக அவரது விதி சதி செய்து விட்டது.

விதியின் விளையாட்டு சைவ மதத்தவருக்கு மட்டும் என்ற எண்ணப்பாடு எல்லாரிடமும் இருக்கிறது. இல்லை விதி சைவ மதத்தவருக்கு மட்டுமே உரியதான ஒன்று அல்ல என்பதை அண்மையில் கத்தோலிக்க மதத்தின் உயர் பீடமான வத்திக்கானையும் பாப்பரசரையும் அது நீதிமுன் நிறுத்திய சம்பவம் நிகழ்ந்தது. பாப்பரசரின் அந்தரங்கப் பணியாளர் வத்திக்கான் இரகசியங்களைக் களவாடி பகிரங்கப்படுத்தினார் என்பது வத்திக்கான் நீதிமன்றத்தின் முன்வைக்கப்பட்ட மனு.

அந்தரங்கம் அசிங்கமாக இல்லாது போனால் அது அம்பலத்தில் பகிரங்கமானால் எதற்கு வழக்கு? காரணம் எப்போதும் எங்கேயும் அந்தரங்கம் அசிங்கமாகவே இருக்கும். ஏனென்றால் மனிதனால் உலக அசிங்கங்களில் இருந்து எவராலும் முழுமையாக ஒதுங்கிவிட முடியாது. ஆசைகள் வெட்கம் அறியாது அதனால் அசிங்கமும் கூடவே இருக்கும். இதுவும் ஒரு பொதுவான விதியே எனலாம்.

ஐ.நா.வில் இலங்கைக்கு எதிரான அரசியல் புயல் மேகம் கருக்கொண்டு நிற்கிறது. வருகிற வருடம் மார்ச் மாதம் நடைபெறும் கூட்டத்தொடரில் அதனால் ஏற்படும் அழிபாடுகளை காணமுடியும் அமெரிக்காவில் வீசிய சாண்டி புயல் சில மணி நேரங்களிலேயே பல டிறில்லியன் டொலர் சேதத்தையும் இழப்புகளையும் கொடுத்து விட்டுப் போயுள்ளது. அது விட்டுப் போகும் அரசியல் இழப்புகளை ஒபாமா றொம்னியா சந்திப்பர் என்பதை இக்கட்டுரை வாசிக்கும் போது வாசகர் தெரிந்து கொண்டுவிடுவர்.

மரத்தால் விழுந்தவனை மாடேறி மிதிப்பது போல் உலக நாடுகள் சந்தித்து வரும் பொருளாதார இழப்புகள் கட்டு மீறி எல்லா நாடுகளிலும் வேலை இழப்புகளும் வேலை அற்றோர் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் அதிகரித்தே வருகின்றன. மக்கள் போராட்டங்களை நாடுதோறும் நடத்துகையில் வெள்ளப் பெருக்குகளும் மண்சரிவுகளும் மக்களை இடப் பெயர்வுக்கு உள்ளாக்கிப் படுத்தும் பாடு கொஞ்சமல்ல. இந்த வேளை குறிப்பாக ஈழத் தமிழ் மக்களுக்கான உதவியை முன்வந்து செய்ய ஒரு நாதியும் இல்லை என்பதே விதியாக இருக்கிறது.

இத்தனை மக்களையும் அவர்களின் சோகச் சுமையையும் தாங்கும் இப்பூமிப் பந்துக்கு 21.12.2012ல் என்னமோ ஏதோ நடக்கப் போகிறது என்ற பீதியை தென் அமெரிக்கா நாடான இன்கா மாயா மக்களின் பஞ்சாங்கக் கணிப்பு ஏற்படுத்தி உள்ளது. எனவே பலவகையான ஊகங்களும் இணையத் தளங்களில் ஒரு பீதியை ஏற்படுத்தி வருகின்றன. இதிலே விஞ்ஞானிகள் செய்து வரும் பூமியின் மின்காந்த வலையில் ஏற்படும் மாற்றங்கள் பூமிப் பந்தின் துருவங்கள் வடக்கு தெற்காக மாறி பல்டி அடிக்கும். அல்லது தனக்குள் கொதி நிலையில் உள்ள திரவ இரும்பு ஈர்ப்பு விசை குறைவால் வெடித்து சுக்கு நூறாக பூமி சிதறிப் போகும். இதுபோல் முன்னரும் நடந்துள்ளது என்கிறார்கள். அப்படியான ஒன்று இன்னும் பல்லாயிரம் வருடங்களுக்கு நிகழும் சாத்தியம் இல்லை என விஞ்ஞானிகள் கூறுகின்றனர். எனவே இப்போதைக்கு நாம் ஆறுதல் அடையலாம்.

# வேட்டி பற்றிய கனவில் இருந்தபோது, கட்டியிருந்த கோவணமும்...!?



சன் தவராஜா

ஈழத் தமிழினம் இன்று முன்னெப்போதையும் போலல்லாது மிகவும் அபாயகரமான ஒரு சூழலில் சிக்குண்டுள்ளது. கடந்த சில தசாப்தங்களாக ஈழத் தமிழினத்தின் நிலமையை விளக்க பலரும், பல்வேறு சந்தர்ப்பங்களிலும் கையாண்ட வசனமே ஆயினும் முன்னெப்போதையும் விடவும் இன்றைய சூழலுக்கே இந்த வாக்கியம் மிகவும் பொருந்திப் போவதை உணர முடியும்.

இலங்கைத் தீவில் தமிழும், தமிழ் இனமும் கடந்த ஒரு நூற்றாண்டாக பல்வேறு அபாயங்களை, அச்சுறுத்தல்களைச் சந்தித்து வந்திருக்கின்றன. 1983 யூலையில் தமிழ் மக்களுக்கெதிராக மிகப் பாரிய அளவில், அரசாங்கத்தின் ஆதரவுடன் வன்முறைகள் நடந்தேறிய பொழுதில் தமிழுக்கும், தமிழ் இனத் திற்கும் எதிராக உருவான மிகப் பாரிய அச்சுறுத்தல் அதுவே என அதிர்ந்து போனோம்.

பின்னாளில், கொக்கட்டிச்சோலை படுகொலை, குமுதினிப் படகுப் படுகொலை என ஊர் ஊராகப் படுகொலைகள் நிகழ்ந்த போது நொருங்கிப் போன தமிழினம் அதுவே சாதாரண நிகழ்வாகியதைக் கண்டு விக்கித்து நின்றது. தொடர்ந்து வந்த நாட்களில் வானில் வட்டமிட்ட உலோகப் பறவைகள் நவாலி, யாழ்ப்பாணம் என கொத்துக் கொத்தாகக் குண்டுகளை வீசி தமிழ் உயிர்களைக் குடித்த போது இதுவே அதிக கொடூரம் என நினைத்துக் கொண்டோம்.

ஆனால், இறுதிக் கட்டப் போரில் சகல முனைகளிலும், சகல வழிகளிலும் - மூன்று ஆண்டுகளாகிய பின்னரும் எண்ணிக்கை தெரியாத அளவில் - தமிழ் மக்கள் கொன்று குவிக்கப்பட்ட போதில் அதுவே இன அழிப்பின் உச்சம், இதனை விட வேறு எதுவும் இருக்க முடியாது என நினைத்துக் கொண்டோம்.

ஆனால், மேலே விபரிக்கப்பட்ட சகல சந்தர்ப்பங்களிலும் தமிழ் மக்களிடம் இருந்த நம்பிக்கையும், ஓர்மமும் காணாமற் போயுள்ள இன்றைய சூழலில் தமிழ் மக்களின் அடையாளமே அழிந்து போகும் அபாயம் தோன்றியுள்ளது. ஈழத்தில் தமிழ் இனம் என்ற ஒன்று இருந்தது, அது தனக்கென ஒரு வரலாறைக் கொண்டிருந்தது, அதன் ஆளுகைக்குள் ஒரு குறித்த பிரதேசம் இருந்து வந்தது, அண்மைக் காலத்தில் அந்த மக்கள் தமக்கென ஒரு நடைமுறை அரசாங்கத்தைப் பேணி வந்திருந்தார்கள் என்பன போன்ற விடயங்களைக் கூறுவதற்கான ஆதாரங்கள் எதுவுமே இல்லாத ஒரு சூழல் படிப்படியாக உருவாகி வருவதைப் பார்க்கும் போது தமிழும், தமிழ் இனமும் எதிர்நோக்கியுள்ள மிக நெருக்கடியான தருணம் இதுவே எனச் சொல்வதில் என்ன தவறு இருக்க முடியும்?

தமிழ் இனத்தின் இருப்பை நிராகரித்துவிட சிங்களம் முயன்ற ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், தமிழ் இனம் தனது இருப்பை முன்னிலும் அதிகமாக நிரூபித்த காலம் முடிவடைந்து விட்டது. தற்போது எது நடந்தாலும் சரியே என்கின்ற நிலைக்கு தமிழினம் தள்ளப்பட்டு விட்டது. தமிழர்களின் இருப்பைத் தக்க வைக்கக் கூடிய வல்லமையைக் கொண்டிருந்த ஆயுதப் போராட்டமும் அதனை முன்னெடுத்த விடுதலைப் புலிகள் இயக்கமும் அடியோடு அழிக்கப்பட்ட பின்னர் எதுவித நம்பிக்கையும் அற்ற சூழ்நிலையில் வாழுமாறு தமிழ் மக்கள் நிர்ப்பந்திக்கப் பட்டுள்ளார்கள்.

ஓரளவு நம்பிக்கையைத் தரக் கூடியதாகக் கருதப்பட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்போ அக முரண்பாடுகளாலும், புற முரண்பாடுகளாலும் தட்டுத் தடுமாறி அலைகடல் துரும்பாய்த் தத்தளித்து வருகின்றது. அது தமிழ் மக்களைக் கரை சேர்க்குமா, நீரில் அமிழ்ந்து வரும் கட்சி என்ற படகைக் காப்பாற்றுமா என்பது ஊகத்திற்கு அப்பாற்பட்டதாக உள்ளது.

இன்று தமிழ்ப் பரப்பில் அதிக விமர்சனங்களுக்கு ஆட்படும் ஒரு அமைப்பாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பே விளங்கி வருகின்றது. தமிழ் மக்களின் தலைவிதியைத் தீர்மானிக்கும் பொறுப்பு அதன் தலையில் கட்டப்பட்டதைப் போன்றும், அதனை அக்கட்சி சத்தியப் பிரமாணம் செய்து நிறைவேற்றியே தீருவோம் என வாக்குறுதி வழங்கி நின்றதைப் போன்றும் அதன் மீது அளவு கணக்கில்லாத விமர்சனங்கள் முன்வைக்கப் பட்டு வருகின்றன. கடந்த காலங்களில் தமிழ் மக்களின் ஜனநாயகக் குரலாகத் தன்னைக் காட்டிக் கொள்ள முற்பட்ட வேளைகளில் எல்லாம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பைத் தலையில் குட்டி அமர்த்தியோரும் கூடத் தற்போது அக் கட்சியை சகட்டு மேனிக்கு விமர்சித்து வருவதைப் பார்க்கும் போது அழுவதா சிரிப்பதா எனப் புரியவில்லை.

உண்மையில் இன்று விமர்சனத்திற்கு ஆட்பட வேண்டியவர்கள் விடுதலைப் புலிகளே. உத்தியோகபூர்வமாக ஆயுதங்கள் மௌனிக்கப் படுவதாக அறிவிக்கப் பட்டதை அடுத்து போராட்ட வடிவத்தை மாற்றிக் கொண்டு தொடர்ந்து பயணித்திருக்க வேண்டிய அவர்கள் குழுச் சண்டைகளால் கொள்கையை மறந்தவர்களாக இருப்பதை விமர்சகர்கள் கண்டு கொள்வதாகத் தெரியவில்லை. நாய்க்கு எங்கு அடி விழுந்தாலும் அது காலைத் தூக்குவதைப் போன்று, தமிழ் அரசியலில் என்ன நடந்தாலும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பையும் அதன் தலைமையையும் பழி சொல்வதே அண்மைக்கால வழக்கமாக மாறியுள்ளது.

இவ்வாறு தமிழர்கள் தமது பிரதான இலக்கை மறந்தவர்களாக முட்டிமோதிக் கொண்டிருக்கும் போது, இலங்கைத் தீவில் தமிழினம் வாழ்ந்ததற்கான அடையாளத்தையே இல்லாமற் செய்வதில் சிங்களம் படிப்படியாக வெற்றி பெற்று வருகின்றது.

அரை நூற்றாண்டு காலத்திற்கும் மேலான போராட்டத்தின் விளைவாகக் கிட்டிய அற்ப சொற்ப அதிகாரப் பகிர்வான மாகாணசபையைக் கூட சட்டம் என்ற கருவியின் துணையோடு பறித்து விடுவதில் சிங்களம் வெற்றி பெற்று விடும் போலத் தோன்றுகின்றது.

நினைத்ததை நடாத்தி முடிப்பதில் வல்லமை பெற்ற மஹிந்த குழுமம், திவிநெகும சட்ட மூலத்தை எப்பாடு பட்டேனும் நிறைவேற்றி விடுவது எனக் கங்கணம் கட்டி நிற்கிறது. அதற்குத் தடையாக யார் வந்தாலும், எது வந்தாலும் - அது இந்தியாவின் அனுசரணையால் உருவான 13 ஆவது திருத்தச் சட்டமாயினும் - அகற்றி விடுவதே அவர்களது பாணி. அதில் ஒரு அங்கமாகவே தற்போது பிரதம நீதியரசர் கலாநிதி ஷிராணி பண்டாரநாயக்காவிற்கு எதிராக நம்பிக்கையில்லாப் பிரேரணை முன்மொழியப் பட்டுள்ளது. மறுபுறம், 13 ஆவது திருத்தச் சட்டத்தின் தீய விளைவுகளைச் சுட்டிக்காட்டி அதனை ஒரேயடியாக ஒழித்துவிட வேண்டும் என்ற வாதங்கள் முன்வைக்கப்பட்டு வருகின்றன. அத்தகைய கருத்துக்கள் சாதாரண ஆட்களிடம் இருந்து மாத்திரமன்றி அரசாங்கத்திலும் நாட்டிலும் பலம் மிக்க நபர்களிடம் இருந்து வெளிப்பட்டு வருகின்றன.

இத்தகைய சூழலில், தமிழ் மக்கள் பெரிதும் நம்பியிருக்கும் சர்வதேச சமூகம் கண்டன அறிக்கைகளை மாத்திரம் விடுத்துக் கொண்டு தூர நின்று வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாத நிலையில் உள்ளது.

இத்தகைய அபாயகரமான கட்டத்தில், தமிழர்களாகிய நாம் இனியும் பயனுள்ள விதத்தில் எதனையும் சாதிக்காமல், வெறுமனே ஒருவர் மீது ஒருவர் சேற்றை வாரி இறைத்துக் கொண்டு இருக்கப் போகின்றோமா? அல்லது யதார்த்தபூர்வமாகச் சிந்தித்துச் செயற்படப் போகின்றோமா? இருந்த யாவும் போய் தற்போது கோவணம் மாத்திரமே மிஞ்சி இருக்கின்றது. அதனையும் தந்து விட்டு நிர்வாணமாக நிற்கப் போகின்றோமா? நின்று நிதானமாகச் சிந்திப்பதற்கான நேரம் இதுவல்ல. விரைந்து செயற்பட்டால் மாத்திரமே உள்ளதையாவது காப்பாற்றிக் கொள்ள முடியும்.

மறுபுறம், தமிழ் மக்கள் தமது அடிப்படைப் பிரச்சினைகள் என்று இதுவரை கூறி வந்த விடயங்கள் யாவற்றையும் மறந்து, மாகாணசபையைக் காப்பாற்றிக் கொள்ளப் போராடுவதில் மற்றொரு அபாயமும் உள்ளது. அதிக நெருக்கடிகளை பல வழிகளிலும் தந்துவிட்டு, திடீரென ஒரு சிறிய நன்மையைச் செய்தால் மனம் ஏனைய கஷ்டங்களை மறந்து விடுவதைப் போன்று, தமிழர்களும் அனைத்தையும் மறந்துவிட்டு மாகாணசபைகளைக் காப்பாற்றப் போராட வேண்டிய நிலைக்கு சிங்கள தேசம் இட்டுச் சென்றுள்ளது. இந்த நேரத்தில் அனைத்தையும் மறந்துவிட வேண்டும் என்பதே சிங்களப் பேரினவாதத்தின் எதிர்பார்ப்பு. எனவே இது விடயத்தில் விழிப்பாக இருக்க வேண்டியது தமிழ் மக்களின் பொறுப்பு.




இன்னுயிர் ஈந்தோர்க்கு...
ஈழக்கனவுக்காய், சுதந்திரக் காற்றின் சுவாசிப்புக்காய், சொற்களில் உறைந்துவிட்ட முள்ளிவாய்க்கால் வதையின் கதைகள் வரை, தெரிந்தும் தெரியாமலும் இன்னுயிர் ஈந்து நடுகற்களாகிப்போன மக்கள், போராளிகள், கட்டளைத் தளபதிகள், தலைமைப்பீடத்தினர் அனைவருக்காகவும் அகரம் குழுமத்தினர் தம் வணக்கத்தைத் தெரிவிக்கின்றனர்

1989ம் ஆண்டு நவம்பர் மாதம் 27ம் நாளை முதலாவது தமிழீழ மாவீரர் நாளாகத் தமிழீழம் உணர்வார்ந்த நிலையில் கடைப்பிடித்தது.

அன்றிலிருந்து தமிழீழத்தின் மிகப் பெரிய நிகழ்வாக, எழுச்சியாக, புனிதமாக உணர்வார்ந்த நிகழ்வாகத் தமிழீழ மாவீரர் நாள் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. மயிரிழை வேகமெடுத்துள்ளது. சோக நதிகளாய் தமிழர் கண்ணீரும் சேர்ந்து பெருக்கெடுத்துப் பாய்கிறது. ஆற்றோரத்து அகதிமுகாம்கள், வயல்மேட்டின் புற்றுப்பிட்டிகள், வீதியோரங்களென விரிந்திருக்கும் இடப்பெயர்வின் துயர வாழ்வுக் குள்ளும் ஏதோ ஒரு திடமான நம்பிக்கை...

''எங்களூருக்கு மீண்டும் செல்வோம்'' ''அந்த மகிழ்வான வாழ்வு கையில் கிட்டும்'' ''நாங்கள் கொடுத்திருக்கும் விலை கொஞ்சநஞ்சமல்ல.'' ''போட்ட முதலை செலவாய் எண்ணிவிட முடியாது அறுவடை எடுத்துத்தான் ஆகவேண்டுமென்ற கட்டாயம் எங்களுக்கு...'' என்ற உள்ளத்து நம்பிக்கை களும் உணர்வுகளும் எம்மை வலுவாகவே பற்றி நிற்கின்றன.
இந்தநிலையில் உணர்வுகளில் உறுதி ஏற்றிக்கொள்வதற்காய் எம்முன்னே விரிகிறது இன்றைய நாள் நவம்பர் 27,

மாவீரர்களுக்காய் எடுக்கப்படுகின்ற பெருவிழா அல்ல, அவர்கள் நினைவிடயங்களின் முன்னே உறுதி ஏற்றுக்கொள்கின்ற உன்னத நாள். எங்கள் நம்பிக்கைகளின் மகத்துவங்களாய் மண்ணில் உறங்கும் மானிடத் தெய்வங்களுடன் மனம்விட்டுப் பேசும் உயிர்ப்புநாள், இந்த நாளுக்காக இன்று தமிழர் மனங்கள் மனமுருகி நிற்கின்றன.

சிங்களப் பேரினவாத இனமொன்றினால் அதன் அரச இயந்திரத்தாலும் தமிழினம் அழிக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் தவிர்க்க முடியாத தெரிவாய் ஆயுதத்தைக் கொண்டு அழிப்பவனை அழிக்கும் எமது விடுதலைப் போராட்டம் தொடங்கியது. படைவளம், படைப் பலம் கொண்ட ஆக்கிரமிப்பு இராணுவத்திற்கு எதிராய் ஒரு சில உணர்வுள்ள தமிழ் இளையோரால் தொடங்கப்பட்டதே இந்த விடுதலைப்போராட்டம், ஆட்பல ஆயுதப்பல ஒப்பீடுகளுக்கு அப்பால் எந்தவகைத் தியாகத்தையும் செய்யத்துணிந்தெழுந்த போராளிகளின் மனபலம் தனிப்பெரும் சக்தியாகவே தமிழரைக் காத்து நின்றது.

அந்தக் காப்பு சக்திகளின் சாட்சியாக 27000 இற்கு அதிக மாவீரர்களை இந்த மண்ணிலே விதைத்து இன்று உறுதிபெற்று நிற்கின்றோம்.

2008ம் ஆண்டு மாவீரர் பணிமனையால் வெளியிடப்பட்ட மாவீரர் விபரங்கள் 27.11.1987 முதல் 31.10.2008 வரையான காலப்பகுதியில் இந்த மாவீரர்கள் வீரச்சாவைத் தழுவிக்கொண்டுள்ளனர். இவர்களில் 17,305 ஆண் மாவீரர்களும், 4809 பெண் மாவீரர்களும் அடங்கியுள்ளனர். 2008ம் ஆண்டு 1974 போராளிகள் விடுதலைக்காகப் போராடி வீரச்சாவைத் தழுவிக்கொண்டுள்ளனர் என அறிவிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு மாவீரரின் உயிர்த்தியாகமும் ஒரே இலட்சியத்தைக் கொண்டதெனினும் அவர்களின் தியாகவடிவங்கள் தனித்துவமானவை.''

எனது மரணத்தின் பின்னால் இந்த மண் மகிழ்வான வாழ்வைப்பெறும் என்ற நம்பிக்கையில் போகிறேன்'' என சொல்லிப்போன கரும் புலி மாவீரர்களினதும்

''எனது வித்துடலைத் தாண்டித்தான் எதிரி எம் மண்ணை ஆக்கிரமிக்கமுடியும்'' என இறுதிவரை உறுதியுடன் போரிட்டு வீழ்ந்த மாவீரர்களினதும், தாய் மண்ணின் இரகசியத்தைக் காப்பதற்காய் கடலிலும் தரையிலுமாகத் தம்மைத்தாமே மாய்த்துக்கொண்ட மாவீரர்களும் என மாவீரர்களின் தியாகப்பதிவுகள் ஒவ்வொன்றும் வித்தியாசமானவை.

அந்த அத்தனை மாவீரர்களினதும் வீரச்சாவு நிகழ்ந்த நாட்களும் வேறுபட்டவை. எனினும் ஒரே இலட்சியத்திற்காய் விதையாகிப்போன மாவீரர்களை நினைவுகொள்ள நவம்பர் 27ஐ தெரிவு செய்த சம்பவமும் எமது விடுதலைப்போராட்டத்தில் தனிப்பதிவாய் அமைந்தது.

ஒரு சில போராளிகளாய் உருவாகி பரந்திருக்கின்ற எதிரிகளின் கண்களில் மண்ணைத் தூவிப் போராட்டப் பாதையை செப்பனிட்ட காலமது. அந்தக் காலப்பகுதியில் தான் விடுதலைப்போரின் முதல் வித்தொன்று 1982.11.27 அன்று லெப்.ச ங்கராக வீழ்ந்தது.

லெப்.சங்கரின் பின்னால் பலவடிவங்களில் மாவீரர்களின் தியாகப் பயணங்கள் பதிவாகி வருகின்றன.

இலட்சியத்தில் மாற்றம்பெறுகின்ற எமது விடுதலைப்போரின் ஒவ்வொரு மாற்றங்களிலும் வித்தியாசமான தியாக வடிவங்கள் பிரச வித்திருக்கின்றன.

1987 ஆம் ஆண்டு யாழ்குடா வடமராட்சியை முற்றுமுழுதாய் ஆக்கிரமித்துவிடவேண்டுமென்ற துடிப்புடன் படைநடவடிக்கையை மூர்க்கமாக முன்னெடுத்த சிங்களப் படைகளுக்கு கரும்புலி கப்டன் மில்லர் நெல்லியடி மத்திய மகாவித்தியாலய படைமுகாமில் கொடுத்த கரும்புலித் தாக்குதல் அன்றைய கால சூழ்நிலையே மாற்றிப்போடும் அளவிற்கு வீரப்பதிவு ஒன்றை எமது போராட்டத்திற்குத் தந்திருந்தது. அந்த ஒரு மாவீரனின் உயிர்க்கொடை சிங்கள தேச த்தின் அத்தனை வீரிய இராணுவ மமதையையும் ஒரே நொடியில் அதள பாதாளத்தில் வீழ்த்தியது. அந்த மாற்றத்தால் அப்போதைய ஜே.ஆர். அரசு இந்தியாவுடன் ஒப்பந்தம் ஒன்றிற்கு செல்லவேண்டிய கட்டாயம் வந்தது என்பது வரலாறு.

அதன்பின் இந்திய இலங்கை ஒப்பந்தம் ஒன்று உருவாக அமைதிப்படை என்ற பேரில் இந்திய இராணுவம் எமது தாயக மண்ணில் வந்திறங்கியது. தமிழர்களின் நிரந்தரத் தீர்விற்கு வழிகோலாத அந்த ஒப்பந்தம் குறித்தும், தாயகம் வந்திறங்கிய அமைதிப்படையின் சுயவடிவம் குறித்தும் தமிழ் மக்களுக்கு வெளிப்படுத்தியாகவேண்டிய தருணமது. அமைதிப்பேச்சுக்கள் உடன்பாடு நிர்ப்பந்தங்களென அமைந்த அந்த சூழலில் பொதிந்துகிடக்கும் பின்னிலை அபாயங்கள் தமிழ்மக்களுக்கு சாதகமற்றதாகவே இருந்தது.

இந்நிலையில் இந்திய அரசின் உண்மைத் தோற்றத்தையும் தமிழீழப் பகுதி எங்கும் ஆயுதங்களுடன் குவிந்து கிடக்கும் இராணுவப் பிரசன்னத்தையும் வெளிச்சம் போட்டுக்காட்டும் தருணத்திற்காய் எமது ஆயுதம் தாங்கிய விடுதலைப்போராட்டம் அன்று அகிம்சைப் போராட்டம் ஒன்றை நடத்தவேண்டியதாயிற்று. நல்லூர் கந்தன் முன்றலில் லெப்.கேணல் திலீபன் தமிழ்மக்களின் பிரச்சினைத் தீர்விற்கான ஐந்து அம்சக்கோரிக்கைகளை முன்வைத்து சாகும்வரை உண்ணா நோன்பை தொடக்கினான்.

இலட்சக்கணக்கில் மக்கள் கண்ணீருடன் திரண்டிருந்த 12 நாட்கள் தொடர்ந்த அந்த அகிம்சைப் போருக்கு இந்தியா இறுதிவரை செவிசாய்க்கவில்லை. அந்த மக்கள் முன்னிலையிலேயே அந்த அகிம்சை நெருப்பு அணைந்து போனது. ஆனால் தமிழர் மனங்களில் இலட்சிய நெருப்பு வேகமெடுத்தது. அந்தத் தியாக மரணம் எமது விடுதலைப்போராட்ட வீரர்கள், வல்லரசு ஒன்றுடன் போரிடும் மன உறுதியைப் பெற்றுத்தந்தது. அச் சம்பவத்திற்குப் பின்னே இடம்பெற்ற இந்திய இராணுவத்துடனான மோதல் எமது விடுதலைப்போராட்டத்தின் முதல் பெண் மாவீரரை இந்த மண்ணில் விதையாக்கியது.

பெண் அடிமைத்தனத்தில் கட்டுண்டு கிடந்த எமது சமூக அமைப்பிலிருந்து போராடும் திறன் கொண்ட வல்லமை படைத்த பெண்களை உருவாக்கிய வரலாற்றுக்கு சான்றாய் 10.10.1987 அன்று இந்திய இராணுவத்துடனான மோதலின் போது 02 ஆம் லெப்.மாலதி என்ற முதல்பெண் மாவீரர் தன் உயிரை ஈந்து வரலாற்றில் பதிவானாள். இவ்வாறாக எமது மாவீரர்களின் வீர தியாகப் பதிவுகள் ஒவ்வொன்றும் வித்தியாசமானவை, அந்தவகையில் தமிழீழ விடுதலைப்புலிகள் என்ற போராளிக் கட்டமைப்பிற்கு அப்பால் மக்கள் படைக்கட்டுமானத்தால் எழுச்சி கொண்ட எல்லைப்படை , சிறப்பு எல்லைப்படை, போர் உதவிப்படை, துணைப்படை போன்றவற்றின் ஊடாகவும் எமதுவிடுதலைப்போராட்டத்தின் மாவீரர் பதிவுகள் நீள்கின்றன.

அவை தவிர சிறப்புப்படை, காவல்துறை படைகளூடாகவும் தமது உயிர்களைத் தியாகம் செய்து மாவீரர்களாய் உறங்கும் மகத்துவங்களையும் இந்த மண்பெற்றிருக்கிறது. இந்த அத்தனை மாவீரர்களுக்கும் தனிச் சிறப்பான பக்கங்கள் உண்டு. ஒவ்வொரு மாவீரர் குறித்த பதிவுகளையும் நாம் வரலாறாய் பார்கின்ற இச்சந்தர்ப்பத்தில் தாயகம் கடந்து எங்கெங்கோவெல்லாம் சென்று சாதனை படைத்துவிட்டு சரித்திரமாய் உறங்கும் முகம் காட்டா கரும்புலி மாவீரர்களின் தியாகங்கள் உச்சத்தைத் தொட்டு நிற்கின்றன. சாதனைகளை மட்டுமே எமக்காய் சாற்றிவிட்டு சாதனைகளை சந்தனப்பேழையும் காணாது முகம் மறைத்து, முகவரி மறைத்து வெடியாகிப்போன அந்த மாவீரர்களின் தியாகம் பற்றியும் அவர்களின் உணர்வுகள் பற்றியும் யாரும் மதிப்பீடு செய்துவிட முடியாது.இவ்வாறாக இந்த மண்ணிற்காய் விதையாகிப்போன பல்லாயிரம் மாவீரர்களின் நினைவிடத்தின் முன்னின்று நாம் எதைப் பேசப்போகின்றோம். எதை நினைத்து சுடர் ஏற்றப்போகின்றோமென்ற கேள்விகளுக்கு விடைகாணவேண்டியவர்களாக நாமே உள்ளோம். இத்தனை விதைப்புகளுக்குமான அறுவடை எமக்கானது மட்டுமே. அந்த அறுவடையை நாம் தான் பெற்றாக வேண்டுமென்ற உறுதிப்பாடை ஒவ்வொரு தமிழனும் தமிழிச்சியும் எடுத்தாகவேண்டும். இதுவே அந்த மாவீரர்களின் இலட்சியக்கனவை நிறைவேற்ற உதவும்.

ஏனைய நாடுகளில் போர் வீரர் நாள் கடைப்பிடிக்கப்படுவதற்கும், தமிழீழ மாவீரர் நாள் கடைப்பிடிக்கப்படுவதற்கும் இடையில் பெரும் வேறுபாடுகளுண்டு. ஏனைய நாடுகளில் எல்லாம் விடுதலைக்குப் பின் அமைந்த அரசுகளால் விழாக்கள் எடுக்கப்படுகின்றனவே தவிர போராட்டம் வீறோடு நடைபெற்றுக் கொண்டிருக்கும் காலங்களில் விழாக்கள் எடுக்கப்படுவதில்லை.

ஆனால் விடுதலைப் போராட்டம் வீறோடு நடைபெற்றுக் கொண்டிருக்கும் நிலையில் எதிரியின் அச்சுறுத்தல்கள், தாக்குதல்களுக்கிடையிலும் பல்வேறு நெருக்கடிகளுக்கிடையிலும் போராட்டத்தையும் நடத்திக் கொண்டு தமிழீழ மக்கள் மண்ணின் விடிவிற்காகத் தம் இன்னுயிர்களை ஈந்த மாவீரர்களை எழுச்சியோடு நினைவு கூர்ந்து வருகின்ற உன்னதம் தமிழீழ மண்ணில்தான். அத்தோடு மாவீரர்களின் பெற்றோர்கள் குடும்பத்தினரை போற்றிச் சிறப்பிக்கப்படுவதுவும் எமது போராட்ட வரலாற்றில் தான்.

வீரச்சாவடையும் தமிழீழ மாவீரர்களது வித்துடல்கள் மாவீரர் துயிலுமில்லங்களில் கல்லறைகளில் விதைக்கப்பட்டும், நடுகற்கள் நாட்டப்பட்டும் வழிபாடியற்றப்படுகின்றது. மாவீரர் நாளில் மாவீரரின் பெற்றோர், குடும்பத்தினர் மாவீரர்களை நினைவு கூரும் நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுக்கப்பட்டு அன்று தமிழீழ மக்களால் போற்றிமதிப்பளிக்கப்படுகின்றனர்.

உலகிலே எங்குமே மாவீரர் நாள் நிகழ்வுகள் போல மாவீரர்களை நினைவுகூரும் நிகழ்வுகள், அவர்களின் பெற்றோரும், குடும்பத்தினரும் போற்றப்பட்டு மதிப்பளிக்கப்படும் நிகழ்வுகள் நடைபெற்றதாகவோ, நடைபெறுவதாகவோ வரலாறுகள் இல்லை.

**மாவீரர் எழுச்சி நாட்களின் நிகழ்வுகளும், நடைமுறை ஒழுங்குகளும்:**

1989 ஆம் ஆண்டில் நவம்பர் 27 ஆம் நாளை மாவீரர் நாளாகவும்

1990 ஆம் ஆண்டில் இருந்து 1994 ஆம் ஆண்டுவரை நவம்பர் 21ஆம் நாளிலிருந்து 27ஆம் நாள் வரை மாவீரர் எழுச்சியாகவும்(வாரமாகவும்) தமிழீழ மக்கள் எழுச்சி நிகழ்வாக நடைபெற்று வந்த தமிழீழ மாவீரர் எழுச்சி நாள் நிகழ்வுகள்

1995 ஆம் ஆண்டிலிருந்து நவம்பர் 25ஆம் நாள் முதல் 27ஆம் நாள்வரை மூன்று நாட்களில் எழுச்சி நாட்களாகக் கடைப்பிடிக்கப்படுகிறது.



# குறள் தரும் இலக்கியம் திருவள்ளுவரின் காதலி!

திருவள்ளுவர் எவ்வளவு பெரிய அறிவாளி. அவர்; ஒரு அவதார புருஷர் அவரை நாம் இன்று பார்க்கும் பிரேமானந்தா, நித்தியானந்தா போன்ற ஆனந்தாக்கள் போல் பெண்களின் பின்னால் அலைகின்ற காமுகனாகப் பார்ப்பதும் அதை அச்சிட்டு அம்பலப் படுத்துவதும் எவ்வளவு கேவலமானது. அத்தகைய செயலை தமிழ் மக்கள், தமிழர் பண்பாடு, தமிழர் அரசியல், தமிழரின் சமூகவியல் பொருண்மியம் பற்றிப் பேசும் அகரம் செய்வதா என ஆத்திரப் படாதீர்கள்.

வள்ளுவர் தமது குறளில் எந்த விடயம் பற்றிப் பேசிய பொழுதும் அவர் தன்னைத் தொடர்பு படுத்திக் குறள் எழுதியதைக் காண முடியாது. ஆனால் இன்பத்துப் பாலில் மட்டும் அவரே குறளில் புகுந்து விளையாடி இருக்கிறார் என்பதை அப்பகுதியின் தொடக்கக் குறளிலேயே காணலாம்.

அந்தப் பகுதியில் காணும் சொல் நயம், பொருள் நயம், கவி நயம் என்பன சங்கப் புலவரின் தரமும் கம்பன் கண்ணதாசன் தமிழின் சுவையும் கொண்டு எவரையும் கிறங்க வைக்கும் என்பதில் ஐயமில்லை. இவை மட்டுமா ?

அவர் காலத்துத் தமிழரின் அகவாழ்வின் அந்தரங்க இரகசியங்களையும் கணவன் மனைவியின் இல்லற வாழ்வையும் அங்கே இடம் பெறும் களவியல் காதல் கற்பியல் பிரிவு போன்ற சமூக நிகழ்வுகளையும் இவற்றுள் தமிழ் பெண்கள் பட்ட துன்ப துயரங்களையும் தலைவன் தலைவியாகப் படம் பிடித்து காட்டி உள்ளார். இவை அக்காலத் தழிழர் வாழ்வின் வரலாற்றுப் படிமங்களாகவும் உள்ளன. சரி இதோ அவர் எமக்கு முன்னால் எங்கோ போய்க் கொண்டிருக்கிறார். அவருக்குத் தெரியாமல் அவர் பின்னால் நாமும் போவோமா?

அவர் போகும் வழியிலே வண்டி இழுக்கும் மாடுகள் பாரம் தாளாது மூச்சு இரைக்க வாய் நுரை தள்ள பொதிகள் ஏற்றிய வண்டிகளை இழுத்துப் போகின்றன. மாலை நேரம் என்பதால் பகல் முழுவதும் வண்டி இழுத்த களை அந்த மாடுகளில் தெரிகிறது. வண்டி ஓட்டியோ தன் வீட்டையும் மனைவி மக்களையும் பார்க்கும் வேளை நெருங்கி விட்டதை எண்ணி உற்சாகமாகத் தெம்மாங்குப் பாட்டுப் பாடியபடியே மாடு களை விரட்டுகிறான்.

வண்டிகளில் பல வித பொருள்கள் பொதிகளாயும் மூடைகளாகவும் நிறைந்து காணப் படுகின்றன. இன்னும் பல வணிகர் தமது கோவேறு கழுதைகளிலும் கழுதைகளிலும் அவற்றின் முதுகின்மேல்; இருபுறமும் சம எடையில் வைத்துக் கட்டப்பட்ட சுமைகளுடன் மலைப் பகுதியான குறிஞ்சி நிலத்தில் இருந்து கடற்கரைத் துறைமுகம் நாடி ஓட்டிச் செல்லப்படுகின்றன.

வழியில் ஒரு வண்டி மயில் தோகைப் பொதிகள் அளவுக்கு மீறி ஏற்றப்பட்ட நிலையில் சாலை ஓரத்தில் அச்சு முறிந்து நிற்கிறது. வண்டிக்காரன் தன்னோடு எப்போதும் எடுத்துச் செல்லும் மாற்று அச்சைப் பொருத்திக் கொண்டிருக்கிறான். முன்னால் போன வள்ளுவர் அவனிடம் ஏதோ கேட்டுவிட்டுப் போகிறார். அவர் அறியாமல் நாமும் அந்த வண்டிக் காரன் கிட்டப்போய் ஏம்பா அந்த ஆளு உன்னிடம் என்ன கேட்டார் நீ என்ன சொன்னாய் எனக் கொஞ்சம் போட்டு வாங்க நினைத்தோம்.

அவனும் என்னைப் போல் பல ஏமாளிகளைப் பாத்திருப்பான் போலும். அதொண்ணும் இல்லைப்பா! நானு குறிஞ்சிப்பாடில இருந்து வர்ரேனுங்க. இன்னைக்கு வழமைக்கு அதிகமா மயில் தோகை மலிவா நாளங்காடியில் கிடைச்சு தா. நானும் நிறைய இலாபம் கிடைக்கும்னு எல்லாத்தையும் வாங்கினே. வண்டில ஏத்தும் போதுதான் பாரம் அதிகம்னு தோணிச்சு.

சரி வாங்கிய பொருளை எப்படியாவது எடுத்துப் போவமேனு வண்டில ஏத்திட்டேனுங்க. மலைப் பாதை, பாரமும் அதிகம் பாவம் மாடு இரண்டும் களைச்சுப் போச்சு. இருட்டுக்கு முன்னாலே தெருமடத்துக்கு போயிடலாமுனு நினைச்சு மாடுகளை விரட்டினேனா? சட்டுனு வண்டி அச்சு முறிஞ்சிடுச்சு. இதைத்தான் அவரும் கேட்டாருங்க நானும் சொன்னேன். அதைக் கேட் டுட்டு மயில் பீலி என்றாலும் வண்டிக்குப் பாரம் பாரம்தானே இனிமே அளவோடு ஏத்திக்கோனு சொல்லிட்டுப் போறாரு. யாரோ நல்லாப் படிச்ச ஆளுபோலத் தெரியுது என்றான்.

அவனிடம் சில வார்த்தை பேசி என் வசம் இருந்த சிறு சிற்றுண்டிப் பொட்டலத்தைக் கொடுத்து இந்தாப்பா வழியிலே வாயிலே போட்டபடி சந்தோசமாய் போய்ச் சேர் எனக் கூறிவிட்டு வள்ளுவன் போகும் திசையில் போகிறேன். அட இந்த வண்டிக்காரன் பட்ட அனுபவத்தை வைச்சா வள்ளுவர், "பீலிபெய் சாகாடும் அச்சிறும்: அப்பண்டம் சால மிகுத்துப் பெயின்"(குறள் 475). என்ற திருக்குறளை எழுதினார்? (சொற் பொருள்- பீலி- மயிலின் தோகை:, சாகாடு- பொதிவண்டி:, பெயின்- ஏற்றின்,)

வண்டிக்காரனின் பட்டறிவை இவர் எமக்குப் படிப்பறிவாக்கி விட்டாரே. வண்டிக்காரன் அனுபவத்தில் நடந்ததை அவர் அறிந்து எமக்குப் பாடமாகத் தந்த இவர் இன்னும் என்னவெல்லாம் செய்யப் போகிறாரோ? பார்த்திடுவோம் நாமும் தொடர்ந்து.




# ஏன் வேண்டும் தனித் தமிழ் ஈழம்?

(பாகம் 10)

அன்புச்செல்வன்.

அண்மைக் காலமாகத் தனித் தமிழீழமே ஈழத் தமிழருக்கான ஒரே தீர்வு என்ற கருத்து உலக அளவில் பரவலாகப் பேசப்பட்டும் அதற்கான செயற்பாடுகளில் பல புதிய முகங்கள் இறங்கிச் செயற் படுவதையும் காண எமக்குப் புத்துணர்வைத் தருகிறது. தமிழகத்தில் எமக்கு எதிராகப் பேசி வந்த காங்கிரஸ் கட்சிப் பிரமுகரான சுதர்ஸ்சன நாச்சியப்பன் குமுதம் டொட் கொம் இணையத்துக்கு வழங்கிய காணொளி நேர் காணலில் இதனைப் பட்டவர்த்தனமாகவே கூறியுள்ளார். எமக்கு இறையாண்மையே கிடயாது எனப் பேசியவர் இன்று இப்படி ஆளும் கட்சியில் இருந்து பேசுவதே எமக்கு பெரு வெற்றி அல்லவா?

இதுவரை கழுவுற நீரில் நழுவுற மீனாகத் திகழ்ந்த தி.மு.க.வும் கலைஞரும் ஐ.நா.வுக்கு தமது மகன் மூலமாக நேரடியாக ஐ.நா. செயலரிடம் மனுக் கொடுக்கும் நிலை அடுத்த பாராளுமன்றத் தேர்தலை நோக்கமாகக் கொண்டதாக காணப்படினும் பட்டினியால் வாடும் ஈழத் தமிழருக்கு வடை பாயாசத்தோடு விருந்தாக வரும் லட்டு லட்டுதானே?

மேலும் தடாலடி நாயகி தமிழக முதல்வர் செல்வி ஜெயலலிதா மீண்டும் சட்ட சபையைக் கூட்டி அடுத்த அரசியல் சாட்டை அடி கொடுக்க ஆயத்தமாகி வரும் செய்திகளும் வருகின்றன. இதுவரை தமிழகத்தில் அநாதைப் பிணம் போல் கிடந்த எமது நிலை இப்போ அரச மரியாதையோடு வரவேற்புப் பெற்றுள்ளதோடு மத்திய அரசையும் கடந்து போய் அமெரிக்க மண்ணில் ஐ.நா.செயலரோடு கைலாகு கொடுக்கும் நிலைக்கு வந்து விட்டதைக் காண முடிகிறது.

இவற்றை எல்லாம் பார்க்கும் போது தனித் தமிழ் ஈழம் கனவு நிலை கடந்து கண்ணில் தெரியும் காட்சியாக மாறிவிட்டது. ஆயினும் இத்தனையும் இங்கு கொடி பிடித்துக் குத்தாட்டம் போட்டு குழுச்சண்டை போடும் எம்மவரால் வந்த நிலை எனக் கூறமுடியாது. ஆனால் அரசியல் முதிர்ச்சியற்ற வக்கிரமான கண்டனக் கணைகளை எதிர் கொண்டு தமிழகத்தில் பணியாற்றும் வை.கோ., நெடுமாறன், வண.பிதா. ஜெகத் கஸ்பர், சீமான், தங்கப்பச்சன் மணிவண்ணன், சத்தியராஜ், திருக்குமரன், போன்றோரின் அயராத பிரச்சாரத்தின் பயன் தந்த விளைச்சல் என்பதை நாம் நன்றியோடு ஏற்றே ஆக வேண்டும். ஆனால் நன்றிக்குப் பதிலாக சுடு சொல்லடி வழங்கும் எம்மவரின் அரசியல் விவேகத்தை என்னவென்று சொல்வது?

இன்னும் சர்வதேச அரசு சார்பற்ற தொண்டு நிறுவனங்களும் புலம் பெயர் தமிழர் அமைப்புகளும் பெரும் நம்பிக்கை ஒளிக் கீற்றை தொடுவானத்தில் பரவச் செய்கின்றன. எது எப்படி ஆனாலும் எமது தனித் தமிழ் ஈழத்துக்கான அவசியத்தையும் நியாயப் பாட்டையும் இவை அதிகப் படுத்துகின்றன என்பதே உண்மை.

தனித் தமிழ் ஈழம் அமைந்து விடக் கூடாது என்பதில் சிங்களத்தைப் போன்றே இந்திய மற்றும் அனைத்துலக அரசுகள் அதிக ஆர்வமாக உள்ளன. அதுவே எமது விடுதலைப்போர் அழிக்கப்பட்ட காரணங்களில் முதன்மையாகத் தெரிகிறது. இந்தியா உள்ளிட்ட அனைத்துலக அரசுகளும் இலங்கையை முழுமையாகத் தமது கைக்குள் போட்டுக் கொள்ளவே விரும்புகின்றன.

அவர்களுக்கு ஈழத் தமிழனின் உயிரை விடவும் தமது தேசங்கள் சார்ந்த வர்த்தக இராணுவ நலன்கள்

பெரிதாகத் தெரியும் பொழுது ஈழத் தமிழனின் அரசியல் பொருளாதார மனித உரிமைகள் என்னவாகிப் போனால் என்ன என்பதே இன்று நாம் காணும் காட்சிகள் எமக்குப் புகட்ட வேண்டிய பாடம். இதனைக் கவனிக்காது த.தே.கூ. இந்த நாடுகளின் தேவைக்கான அரசியலை நடத்தி ஈழத் தமிழ் இனத்தையே படுகுழிக்குள் புதைத்து வருகின்றனர்.

இனி சென்ற இதழில் நிகழ்ந்ததாகக் குறிப்பிட்ட வரலாற்று அதிசய விபத்து பற்றியதைப் பார்ப்போம்.

1991ல் இந்தியக் கடலாய்வு நிறுவனம் தமிழ் நாட்டில் நாகபட்டின மாவட்டத்தில் உள்ள தரங்கம் பாடிக்கும் பூம்புகாருக்கும் இடையில் உள்ள ஒலிஅலைக் கருவிகள் மூலம் எடுத்த படங்களில் கடலில் 19 மீட்டர் சுமார் 80 அடி ஆழத்தில் மூழ்கிய கப்பல் ஒன்று தெரிய வந்தது.

சுழி ஓடிகளால் அந்தக் கப்பலைக் கண்டறிய முடியவில்லை. ஆனால் மனிதரால் கட்டப்பட்ட அரை வட்ட வடிவ சுவர் போன்ற கட்டுமானத்தைக் கண்டறிந்தனர். அதன் திறந்த இரு பகுதி முனைகளுக்கும் இடையில் சுமார் 20 மீட்டர் தூரம் இருப்பதையும் கண்டு கொண்டனர். இது கோயிலா கோட்டையா என்ற கேள்வியுடன் ஆய்வுகள் நிறுத்தப்பட்டு விட்டன.

மீண்டும் 1993ல் தொடங்கிய கடலாய்வு போதிய நிதி ஆதாரம் இல்லை என்ற காரணத்தால் நிறுத்தப்பட்டு விட்டது. இந்த ஆய்வுகள் பற்றிக் கருத்துத் தெரிவித்த கிரஹாம் ஹன்கொக் என்ற பிரபல கடலாய்வு நிபுணர் இச்சிதைவுகளின் காலம் கி.மு.9500 க்கு முற்பட்டது எனச் சொன்ன போது ஆரிய மேலாதிக்க சக்திகளை விழித்தெழ வைத்து விட்டது.

ஏனென்றால் அவர்கள் தம்முடையது எனப் பேசி வந்த சிந்து வெளி ஆய்வுகளின் காலத்துக்கு முந்தியது தமிழரின் நாகரீகம் என்று உண்மையை அவர்களால் தாங்க முடியவில்லை.

கலைஞர் தலைமையிலான தமிழக அரசு 25 இலட்சம் ரூபாய் வழங்கி ஊக்கப் படுத்திய போதும் முழுமையான ஆய்வை இந்திய மத்திய அரசு தொடரவில்லை. அணு குண்டுச் சோதனைகளுக்கும் விண்வெளி ஆய்வுக்கும் பணம் செலவு செய்துவரும் அரசுக்கு கடலடி ஆய்வுகளைச் செய்யப் பணம் இல்லை என்றால்

தமிழரின் இறையாண்மை உட்பட்ட அரசியல் தாயக தேசக் கோரிக்கை வலுப்பெறாமல் செய்யவும் ஆரிய திராவிட இன முரண்பாடுகளை அடக்கவும் இத்தகைய அடக்குமுறைகள் அவசியமானவையே. மேலும் தமிழக அரசும் தமிழகத் தமிழரும் கடந்த 50 வருடங்களுக்கு மேலாக திராவிட இனவழிச் சிந்தனையில் மூழ்கிவிட்டுள்ளதால் 1500 ஆண்டு களுக்கு மேலாக ஆரியரின் அடிமைகள் என்றும் நீசர்கள் என்றும் கூறி அடக்கு முறைக்கு உள்ளான திராவிடரை எப்படி ஆரியர் எனக் கூறும் ஆளும் பார்ப்பனவர்க்கம் சமமாக நடத்த முடியும்?

எனவே ஈழத் தமிழருக்கு மட்டும் அல்ல தமிழகத் தமிழர்களுக்கும் ஏனைய உலகத் தமிழர்களுக்கும் முன்னோடியாக வரலாற்றில் இடம் பெற்றுவிட்ட ஈழம் உயிர் பெற்றுத் தனி இறைமை உள்ள நாடாக உருப் பெற்றால் மட்டுமே உலக வரை படத்தில் தமிழ் இனமும் மொழியும் நிலைத்து உயிர்வாழ முடியும் என்பதே இன்றைய அரசியல் யதார்த்தமாக உள்ளது. இதற்கு மேலும் ஆறறிவு படைத்த எவரும் தனித் தமிழ் ஈழத்தை தேவை அற்றது எனக் கூற முடியுமா? (தொடரும்)

# அந்தரித்து திரியும் ஆன்மாக்கள்...



த.பாவலன்

வழமைபோன்று கடந்த சில ஆண்டுகளாக அடுத்து வரும் சில மாத காலப்பகுதிகள் தமிழ் மக்களுக்கு உணர்வு பூர்வமானதாகவும் மறுபுறத்தே நம்பிக்கையினையூட்டுவதாகவும் அமைந்து விடுகின்றது. அவற்றினுள் முதன்மையாகத் தமிழர்களது வாழ்வோடும் உணர்வோடும் ஒன்றிப்போய்விடுகின்ற மாவீரர் நினைவு தினம் அமைந்து விடுகின்றது. அடுத்ததாக இனப்படுகொலைகள் மற்றும் போர்க்குற்றங்கள் தொடர்பில் இலங்கை அரசு மீது மீண்டும் கிடுக்கிப்பிடி போடும் ஐ.நா. வினது நடவடிக்கைகளாகும்.

தமிழர்களது வாழ்வோடு ஒன்றிணைந்து விட்ட மாவீரர் தின நினைவு கூரல்கள் எவையுமே இப்போது தாயகத்தில் பகிரங்கமாக நடப்பதில்லை. அதற்கான புறச்சூழலும் இல்லை. மக்களால் புனிதமாகப் பேணப்பட்ட மாவீரர் துயிலுமில்லங்கள் எவையும் இப்போது தாயகத்தினில் இல்லை. அவை அமைந்திருந்த இடங்கள் அனைத்தும் இடித்தழிக்கப்பட்டு வெறும் தரவைகளாக்கப்பட்டு விட்டன. சிலவற்றினில் பாரிய படைத்தளங்கள் முளைத்தும் விட்டன.

இலங்கை அரசோ நடந்து முடிந்த போரினது எச்சங்களாக அவையிருந்து மக்களை இயல்பு வாழ்விற்கு திரும்பி விடாது தடுப்பதாக நியாயம் கற்பிக்கின்றது. ஆனாலும் உலகில் எந்தவொரு நாடுமே அவ்வாறு போர்களினில் மாண்டு போனவர்கள் நினைவாக உள்ள கல்லறைகளை அழித்ததாக வரலாறு கிடையாது. இலங்கையைத்தவிர என்கின்றன தமிழ் தரப்புக்கள்.அத்துடன் அவை எப்போதுமே போர் வெற்றிச் சின்னங்களாக இருந்தது கிடையாது. போரின் வலியை உலகிற்கு சொல்வதாகவும் மாவீரர் துயிலுமில்லங்கள் இருந்திருந்தன என்கின்றனர் நடு நிலை அவதானிகள்.

கிளிநொச்சி, முல்லைத்தீவென வட கிழக்கில் பரவலாக அரச படைகள் அண்மைக் காலங்களில் கட்டி முடித்திருக்கும் போர் வெற்றிச்சின்னங்களை அகற்றுவதென்ற பேச்சிற்கே இடமில்லையென்கின்றது இலங்கை அரசு. தமிழ் மக்கள் அடிமைப்படுத்தப்பட்டதன் சின்னமாக அது அமைந்திருப்பதாக கருணாநிதி முதல் மாவை சேனாதிராசா வரையாக விமர்ச்சித்து வருகின்றார்கள். ஏ-9 வீதியில் கிளிநொச்சியிலும் ஆனையிறவிலும் அமைக்கப்பட்டிருக்கும் போர் வெற்றிச்சின்னங்கள் என்றுமே கடந்து செல்லும் உள்ளூர் மக்களுக்கு உவப்பானதாக இருப்பதேயில்லை. சுற்றுலாவில் வந்து போகும் புலம்பெயர் உறவுகளுக்கு சிலவேளைகளில் அவை காட்சிப்பொருட்களாக இருந்து விடுகின்றது. ஆனாலும் அதன் பின்னாலுள்ள அடிமைப்படுத்தப்பட்ட தமிழர்களது வாழ்வை அவர்களும் புரிந்து கொண்டே விடுகின்றனர்.

மூன்று தசாப்த கால யுத்தம் தந்த வடு, வட கிழக்கினில் தமிழர் தாயகப்பகுதிகளில் சுமார் மூன்று இலட்சத்திற்கும் மேற்பட்ட உயிர்களை காவு கொள்ள வைத்துள்ளது. அவ்வாறு தமது குடும்ப அங்கத்தவர்களை இழந்த குடும்பங்களுக்கு நவம்பர் மாதம் மறந்து போவதற்கொன்றும் சாதாரணமானதல்ல. கண்ணீரும் செந்நீரும் கலந்த கலவையால் அலங்கரிக்கப்பட்ட மாதமது. எதை இடித்தழித்தாலும் உள்ளங்களுள் தேங்கிப்போயிருக்கும் உணர்வுகளை அழிக்க முப்பது தசாப்த காலமது கூடப்போதாது.

மறுபுறத்தே இனப்படுகொலைகள் மற்றும் போர்க்குற்றவிவகாரங்கள் தொடர்பில் இலங்கை அரசு மீதான நெருக்குவாரங்கள் அடுத்துவரும் மாதங்களில் உக்கிரமடையலாமென எதிர்பார்க்கப்படுகின்றது. 49 இற்கும் மேற்பட்ட அமைப்புக்கள் தொடரும் மனித உரிமை மீறல்கள் மற்றும் இனப்படுகொலைகள், போர்க் குற்றங்கள் தொடர்பினில் விரிவான அறிக்கைகளை ஐ.நா.வசம் கையளித்துள்ளன. மறுபுறத்தே மேலும் சில தரப்புக்கள் சர்வதேச நடுவண் நீதிபதிகளை நியமித்து மாதிரி விசாரணைகளை மேற்கொண்டு அறிக்கை சமர்ப்பிக்கவும் தயாராகின்றன.சர்வதேச மன்னிப்பு சபை பகிரங்கமாகவே நாடுகளை அணிதிரளுமாறு கோரிக்கைகளை விடுத்த வண்ணமுள்ளது.

ஏற்கனவே கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் பரிந்துரைகளை அமுல்படுத்த வேண்டுமென அமெரிக்க தலைமையில் ஜெனீவாவில் நிறைவேற்றப்பட்ட பிரேரணை இலங்கை அரசினால் இதுவரை கண்டுகொள்ளப்படாதேயிருக்கின்றது. இது அமெரிக்காவிற்குக் கடும் சீற்றத்தையும் ஏற்படுத்தியுள்ளது. மறுபுறத்தே திட்டமிட்ட வகையில் அரச தரப்புக்களால் 13ஆவது திருத்தச்சட்டத்தை நீக்குவது தொடர்பில் வெளியிடப்பட்டுவரும் கருத்துக்கள் இந்திய அரசையும் சீற்றங்கொள்ள வைத்தேயுள்ளது. ஐ.நாவில் கழுத்தை இறுக்கும் வகையிலான கண்டனங்கள் முற்றி வருகின்றபோதும் இலங்கை அரசு காட்டிவரும் அதீத நம்பிக்கையின் பின்னணியில் எத்தரப்புக்களிருக்கின்றதென்பது கேள்விக்குறியே.

வட கிழக்கு தமிழர் தாயகப் பகுதிகளில் இயல்பு வாழ்வு திரும்பிவிட்டதாகக் காட்டிக் கொள்ள அரசு தொடர்ந்தும் அதீத முயற்சிகளை மேற்கொண்டே வருகின்றது. அவ்வகையிலேயே மெனிக் முகாமை இழுத்து மூடியதனூடாக வன்னியிலிருந்து இடம்பெயர்ந்த மக்களை மீளக்குடியமர்த்திவிட்டதாகக் காட்டிக் கொள்ள அரசு பாடுபட்டே வருகின்றது. ஆனால் மீள்குடியமர்வு எனும் பெயரில் அழைத்துச்செல்லப்பட்ட கேப்பாபிலவு மக்கள் காடுகளுக்குள் குடியேற்றப்பட்டது பகிரங்கமான கதையே. அவை பற்றி மூச்சுக்கூட விடக்கூடாதென படை அதிகாரிகள் நிர்ப்பந்தித்து வருகின்றமை உண்மைத் தாற்பரியத்தை வெளிப்படுத்தி நிற்கின்றது.

உண்மையில் தெளிவான படைத்தரப்பு நேரடியாக தொடர்புபட்ட சான்றாதாரங்களுடன் இருக்கும் மூதூர் அக்ஷன் பெய்ன் நிறுவனப்பணியாளர்கள் படுகொலை, திருகோணமலை பாடசாலை மாணவர்கள் ஐவர் படுகொலை, ஊடகவியலாளர்கள் படுகொலை மற்றும் காணாமல் போகச்செய்யப்பட்டமை பற்றிய பேச்சுக்கள் ஆரம்பமாகத்தொடங்கியுள்ளது. எதிர்பார்த்தது போன்று இப்படுகொலைகள் தொடர்பான விசாரணைகளைத் துரிதப்படுத்தி பலியாடுகளாக சிலரை சிக்கவைக்க அரச உயர்மட்டம் தயாராகி வருவது அப்பட்டமாக இப்போது தெரியவருகின்றது. குறிப்பிட்ட சில படை அதிகாரிகளை கொலைகளின் பின்னணியில் இருப்பதாகக் கூறிக் கொள்வதன்மூலம் பெரும்பான்மை தரப்புக்கள் தப்பிக்க முற்படப் போகின்றன.

வட கிழக்கில் இடம்பெற்ற ஆயிரக்கணக்கான அப்பாவிகளது காணாமல் போதல் சம்பவங்கள், தெருவோரப்படுகொலைகள் என்பவற்றிற்கு அப்பால் வன்னிப்பேரவலத்தின் முக்கிய சூத்திரதாரிகள் தப்பித்துவிடக் கூடாதென்பதே தமிழ் மக்களது எதிர்பார்ப்பு. சரண் அடைந்தவர்களைப் படுகொலை செய்யச் சொன்னவர்களை கண்முன்னே சரண் அடைந்தவர்கள் பற்றி தகவல் வெளியிட மறுப்பவர்களென ஆளும் வர்க்கத்தின் நிழல் முகங்கள் பல. ஏனையவர்களை பலியாடாக்கி தப்பித்துக் கொள்ள முற்பட்டுள்ளன.

எல்லாவற்றிற்கும் மேலாக அடங்க மறுக்கும் புலம்பெயர் தமிழர்களை வட்டத்திற்குள் கொண்டுவர முழு முயற்சிகள் நடக்கின்றன. கட்சி வேறுபாடின்றி ஆளும் தரப்புடன் எதிர்தரப்பான ஐக்கிய தேசியக் கட்சியும் கூட பகை மறந்து புலம் பெயர் தமிழ் தரப்புக்களை வளையத்தினுள் கொண்டுவர முழு அளவில் முற்பட்டுள்ளன. வெட்கம் கெட்ட கூட்டமைப்பு பின் கதவு அங்கத்தவரொருவர் கூட தனது செயலாளரை அனுப்பி வைத்துள்ளாராம். எது எவ்வாறாக இருப்பினும் பிளவுபட்டிருக்கின்ற போதும் புலம் பெயர் அமைப்புக்களில் பெரும்பாலானவை இனப் படுகொலை, போர்க்குற்ற விவகாரங்களில் ஒன்றித்து அணி திரண்டு விடுகின்றமை அரசினது துரதிஷ்டங்களில் ஒன்றன்றி வேறல்ல.

இந்துக்களது மத ரீதியான நம்பிக்கைகளில் ஒன்று துர்மரணத்தை அடைந்த ஆன்மாக்கள் சாந்தியடையாது அந்தரித்துத் திரியுமென்பதாகும். ஆம் அந்த ஆன்மாக்கள் இப்போதும் போர்க் குற்றங்களுக்கும் இனப்படுகொலைகளுக்கும் காவு கேட்டு அலைந்து திரிகின்றன. இது கார்த்திகை மாதம்.

யேர்மனியில் தரம்மிக்க ஓர் மொத்த வியாபார நிலையம்!

# StaR-Impex

கடல் உணவு வகைகள் மற்றும்
மரக்கறி வகைகள்
வாரவாரம் உடனுக்குடன்
இறக்குமதி செய்கின்றோம்!




தரமான முத்திரை பதித்த தயாரிப்புக்களான
**Niru,Kings,NGR, Rabeena, Suriya,Vaani,Leela,TRS**
பொருட்கள் எம்மிடம் நியாயவிலையில் கிடைக்கும்!



**Kipper Str. Tor. 03**
**44147 Dortmund**
**Tel: 0231 86 02 696**

**Mobil: 0172 21 83 703**
**Fax: 0231 86 02 698**
**E-Mail: star-impex@live.de**
**Web: www.star-impex.net**

Öffnungszeiten:
Mo-Fr: 10:30 - 19:30
Sa: 9:30 - 18:00







எம்மிடம் 100 யூரோவிற்கு மேல்
கொள்வனவு செய்யும்
வாடிக்கையாளர்கள் ஒவ்வொருவருக்கும்
ஒரு தடவை ஒரு முத்திரை
பதிக்கப்படும்.
இவ்வாறு 10 முத்திரை நீங்கள்
பெற்றபின் எம்மிடம் இருந்து
50 யூரோவிற்கான
ஒன்று வழங்கப்படும்.

## GUTSCHEIN

[இச்சலுகை நேரடியாக உடன் பணம்
செலுத்துபவர்களுக்கு மட்டுமே]



# i(யோ)Phone...

- அறிவழகன்-

நீங்கள் iphone வைத்திருக்கிறீர்களா...? அப்படியானால் நீங்களும் ஒரு சில மரணங்களிற்கு உடந்தையாளர் என்பதை ஏற்றுக்கொள்கிறீர்களா..? இல்லை என்பதுவே உங்கள் பதிலாக இருக்கும். ஆனால் அதுதான் உண்மை என்றால் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் உங்களுக்கு இருக்கவேண்டும்.

ஆப்பிள் நிறுவனத்தின் தயாரிப்பான iphone , இளையவர்கள் மத்தியில் மிகவும் பிரபலம். கைக்கடக்கமான உருவத்துடன், நவீன அம்சங்கள் இணையப்பெற்றிருந்தால் யார்தான் விரும்பப்போவதில்லை. ஆனால், அண்மைக்காலமாக பலவிதமான குற்றச்சாட்டுக்களுக்கு Apple நிறுவனம் உட்பட்டிருக்கிறது. அவையனைத்திற்கும் ஒரே காரணம், சீனாவிலுள்ள அவர்களது உற்பத்தி ஆலைகளில் நடைபெறும் தற்கொலைகள்.

ஆப்பிள் தனது ஆலைகளை சீனாவில் அமைத்திருப்பதற்கான காரணம், உற்பத்திச் செலவுகளை மிகக்குறைவான பணத்தில் நிறைவேற்ற முடியும் என்பதே ஆகும். ஷான்க்சி மாநிலத் தலைநகரில் உள்ள Foxconn என்ற ஆலையில் 79,000 தொழிலாளர்கள் உள்ளனர். முக்கிய சர்வதேச நிறுவனங்களுக்கு உதிரிப்பாகங்களை உற்பத்தி செய்து வழங்கும் சங்கிலித் தொடரில் இது ஒரு பகுதியாகும் இவ்வாறான நிறுவனங்களுள் ஆப்பிளின் புதிய iPhoneம் அடங்கும். Foxconn பெரும்பாலும் இளம் 1.1 மில்லியன் தொழிலாளர்களுடன் சீனாவில் மிகப் பெரிய தனியார் நிறுவனமாக உள்ளது.

இத்தொழிற்சாலையின் உள்மர்மங்களை அறியும் பொருட்டு, சீனாவிலுள்ள ஒரு பிரபல பத்திரிகையான Shanghai Evening Post சமீபத்தில் அதன் நிருபர் ஒருவரை தொழிலாளி போல வேலை தேடுமாறு இரகசியமாக அனுப்பியிருந்தது. அவரும் நிறுவனத்தால் சேர்த்துக்கொள்ளப்பட்ட பின்னர், அவர் அங்கு ஏழு நாட்கள் பயிற்சி பெற்று அதன் பின் மூன்று நாட்கள் புதிய iPhoneன் தகடுகள் இணைப்பு பகுதியிலும் பணிபுரிந்தார். முக்கியமாக தொழிலாளர்களின் தங்குமிடப் பிரிவு குறித்து விபரமாக அவர் எழுதினார்: இங்கே தொழிலாளர்கள் தங்குமிடம் முழுவதும் குப்பைகளின் நுர்நாற்றத்தைக் கொண்டுள்ளது... குப்பை கூளங்கள் ஒவ்வொரு அறைக்கும் வெளியே அகற்றப்படாமல் இருக்கின்றன. என்னுடைய துணி வைக்கும் பகுதியில் இருந்து கரப்புக்கள் ஊர்ந்து வெளிவந்தன படுக்கை விரிப்புக்கள் சாம்பல் போல் அழுக்கடைந்துள்ளன. தங்குமிடங்களின் அனைத்துச் சாளரங்களும் தடைகளைக் கொண்டுள்ளன. ஏதேனும் உலோகப் பொருட்களை வைத்திருந்தால் தொழிலாளர்கள் பணிநீக்கம் செய்யப்படுவர். வரைமுறைக்கு எதிரான வகையில் அவர்கள் பலமணி நேரங்கள் தொழில்புரிகையில் அவர்கள் அசையாமல் உட்கார்ந்திருக்க வேண்டும். இணைப்பு முறை வரிசையில் அவர்கள் iPhone பின்தட்டை மூன்று வினாடிக்குள் தயாரிக்க வேண்டும் ஒவ்வொரு பாகத்தையும் எடுத்து நான்கு இடங்களைக் குறிக்க வேண்டும் இதற்கு எண்ணெய் வகையிலான பேனா உள்ளது. ஒவ்வொரு 10 மணி நேரத்திற்குள்ளும் ஒரு தொழிலாளி 3,000 பின்தட்டை முடிக்க வேண்டும். பல மணி நேரத்திற்குப் பின்னர் எனக்குப் பொறுக்க முடியாத கழுத்து வலி ஏற்பட்டது. என்று அந்த நிருபர் ஆதாரங்களுடன் எழுதிய கட்டுரையால் Apple நிறுவனத்தின் i phone தயாரிப்புப் பிரிவு மனித உரிமைகள் அமைப்பின் கவனத்தை ஈர்த்துள்ளது.

2010ம் ஆண்டில் 10 இளந் தொழிலாளர்கள் பொறுக்க முடியாத சூழ்நிலையை ஒட்டி தற்கொலை செய்து கொண்டதை அடுத்து Foxconn சர்வதேச கவனத்தை முதலில் ஈர்த்தது. தொழிலாளர்களைப் பெயரளவிற்குச் சாந்தப்படுத்தும் வகையில் ஊதியஉயர்வைக் கொடுத்தது ஆனால் அதிக உற்பத்தியை ஏற்கனவே நடைபெற்ற இடங்களில் இருந்து தொழிலாளர் ஊதியங்கள் குறைவாக இருந்த உட்பகுதி மாநிலங்களுக்கு மாற்றியது. ஆனால் அங்கும் தொழிலாளர்கள் மீது நிறுவனம் கொண்டுள்ள வக்கிர உணர்வு சற்றும் மாறாமல் உள்ளதாகத் தெரிவிக்கப்படுகிறது. இதற்கும் மேலாக கடந்த வருடத்தின் இறுதியில் Foxconn நிறுவனத்தின் தலைமை நிர்வாக அதிகாரி Terry எணிதஅவருடைய ஆலைகளை ஒரு மிகப் பெரிய மிருகக் காட்சி சாலையுடன் ஒப்பிட்டு, ஒரு மில்லியன்விலங்குகளை நிர்வாகம் செய்வது எளிதல்ல என்று கூறியமை மூலம் அவர் தொழிலாளர்கள் பால் கொண்டுள்ள மதிப்பற்ற தன்மையை வெளிப்படுத்தியுள்ளார். இவரது கூற்றும் Foxconn நிறுவனத்தின் மதிப்பை பெருமளவு சரியச் செய்துள்ளது.

உற்பத்தியை வெளிநாடுகளில் கொண்டுள்ள பல நிறுவனங்களைப் போலவே Boxconn இப்பொழுது கடல் கடந்த விரிவாக்கத்தை கொண்டுள்ளது. இதற்கு பிரேசிலில் எட்டு ஆலைகள் உண்டு இதன் அடுத்த முக்கிய உற்பத்தி நிலையங்கள் இந்தோனேசியாவில் உள்ளன அங்கு சாரசரி மாத ஊதியம் சீனாவில் இருப்பதைப் போல் மூன்றில் ஒரு பகுதிதான். சீனத் தொழிலாளர்களுக்கு சலுகைகளை கொடுத்தல் என்பதற்கு முற்றிலும் மாறாக, பாக்ஸ்கான் அவர்கள்மீது அழுத்தங்களை அதிகப்படுத்தியுள்ளது வேலை முடிக்கவில்லை என்றால் அவர்கள் பணிநீக்கத்திற்கு உட்படுத்தப் படுகிறார்கள். ஒரு தொழிலாளிக்கு, சாதாரணமாக 1,550 யுவான்கள் (245) ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படுகின்றது. இது சீனாவிலுள்ள அடிமட்டத் தொழிலாளியின் ஊதியத்தை விடக் குறைவு என்பது கவனத்திற்குரியது.

Foxconn நிறுவனம், iPhones ன் மொத்த உற்பத்தியில் 85% ஐ இணைக்கிறது. இது, ஆண்டு ஒன்றிற்கு 50 மில்லியனுக்கும் மேலாகும். இந்த ஆண்டு முன்னதாக நிறுவனத்தின் உழைப்பு நிலைமையைத் தாம் கவனித்துக் கொண்டிருக்கிறோம் என்று வெளியுலகிற்குத் தெரியப்படுத்தும் வகையில் Apple உடைய தலைமை நிர்வாக அதிகாரி கூடிட் cook சீனாவில் அமைந்திருக்கும் Foxconn ஆலைகளைச் சுற்றிப்பார்த்துத் தன் பொருட்களைத் தயாரிக்கும் தொழிலாளர்களின் அவல நிலைகுறித்துக் கவனம் எடுப்பதாகத் தெரிவித்தார். உலகெங்கிலும் உள்ள எங்கள் ஒவ்வொரு தொழிலாளி குறித்தும் நாங்கள் அக்கறை கொண்டுள்ளோம்.... நாங்கள் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை என்று கூறப்படுவது முற்றிலும் தவறானதாகும், எங்களைப் பாதிப்பதாகும். என்றார். அதேபோல சீனாவின் துணைப் பிரதமர் லி கெக்கியாங்கும் பரிவுணர்வைக் காட்டுவது போல் நடித்து, ஆப்பிள் மற்றும் பிற சர்வதேச நிறுவனங்களை அவர்கள் சுரண்டும் மில்லியன் கணக்கான சீனத் தொழிலாளர்கள் மீது அதிகஅக்கறை எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். ஆனால் இவை அனைத்தும் திட்டமிடப்பட்ட நாடகம் என்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை.



கடந்த மாதம் பதின்மூன்றாம் திகதி , நிறுவனத்தில் பணிபுரியும் ஒரு தொழிலாளி விரக்தி நிலையில், கூரிய ஆயுதம் ஒன்றினால் தனது மணிக்கட்டைக் கிழித்துத் தற்கொலைக்கு முயன்றிருந்தார், அதே போல அதற்கு ஒருவாரத்திற்குப் பின்பதாக இன்னொரு தொழிலாளி மாடியில் இருந்து குதித்து தற்கொலை செய்திருக்கிறார். இவ்வாறான நிகழ்வுகளால் தொழிலாளர்கள் மத்தியில் போராட்டங்கள் வெடிக்கும் நிலை தோன்றியிருக்கிறது.

இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் கடந்த மாதம் குறிப்பாக புதிய iPhone களுக்கு ஏராளமான தேவை ஏற்பட்டிருக்கும் காரணத்தினால் சில இடங்களில் Foxconn அதிகாரிகள் பாடசாலை மாணவர்களை தமது நிறுவனத் தொகுப்பில் சேருமாறு கட்டாயப்படுத்துகின்றனர். ஜியாங்சு மாநிலத்தில் ஹுவையன் நகரத்தில் சில மூன்றாம் நிலை கல்விக்கூடங்கள் ஆயிரக்கணக்கான மாணவர்களை இரண்டு மாதகாலத்திற்கு Foxconn நிறுவனத்தில் இணைந்து பணிபுரியுமாறு கட்டாயப்படுத்துகின்றன. பாடசாலைகளின் மேலாளர்களிற்கு அதிக பணம் கொடுக்கப்பட்டு இவ்வற்புறுத்தல் இடம்பெறுவதாகத் தெரிவிக்கப்படுகிறது.

ஒரு புறத்தில் தொழிலாளர் சார்பாக வந்துகுவியும் கண்டனங்களுக்கு மேலாக, மறுபுறத்தில் Apple இன் போட்டி நிறுவனங்களான Samsung மற்றும் HTC ஆகியன Apple மீது தொடுத்திருக்கும் வழக்கும் விநோதமானது. முன்னொருமுறை அணீஈடுனு நிறுவனம் தனது மென்பொருளியல் முறையை Samsung திருடிப் பயன்படுத்துவதாகத் தெரிவித்து வழக்காடி வெற்றியும் பெற்றது. இப்பொழுது Samsung தொடுத்திருக்கும் வழக்கும் இதே வகைதான். Samsung நிறுவனம் தனது பழைய கணக்கைத் தீர்த்துகொள்ளத் தயாராகியிருக்கிறது. ஆனால் HTC நிறுவனமும் இப்போது Samsung உடன் கூட்டுச் சேர்ந்து Apple ஐத் தாக்க ஆரம்பித்திருக்கிறது.

தொழிலாளர் நலனைக் கவனியாது, தனது விற்பனையில் மட்டும் குறியாக இருக்கும் Apple நிறுவனத்திற்கு இவற்றைவிட வேறு ஒரு வேடிக்கையான பிரச்சனையும் நிறுவனத்திற்கு உள்ளதாம் . அது என்ன தெரியுமா..? ஆப்பிள் நிறுவனத்தின் தற்போதைய வங்கி இருப்பு இருபது மில்லியன் டொலர்கள் ஆகும். இவ்வளவு தொகைப் பணத்தை வைத்து அடுத்து என்ன செய்வது என்பது தான் அது ...!

மூலம்: Shanghai Evening Post



Super Market
JALLAHAM
GmbH
யாழகம்
இலங்கையில்லிருந்து நேரடியாக இறக்குமதி
செய்யப்படும் உடன் மீன்வகைகள்.
ஒவ்வோரு மாதமும் 25ஆம் திகதி முதல் அடுத்த மாதம் 5ஆம் திகதி வரை அனைத்து மளிகைப்பொருட்களும் 10% விலைக்கழிவில்!
இலங்கை இந்திய டொமினிக்கன் நாடுகளில்லிருந்து இறக்குமதி செய்யப்படும் உடன்மரக்கறிவகைகள்.
மிகக்குறைந்த விலையில் பொருட்க்களைப் பெற்றுக்கொள்ளலாம்.
NIDO
SALE
மலிவு!
100CHFக்கு மேல் பொருட்க்கள் வாங்கினால் 5KG அரிசி இலவசம்!
மலிவு!
குறை இருப்பின் எம்மிடம் சொல்லவும்
நிறை இருப்பின் நண்பரிடம் சொல்லவும்
Avenue de Marges 88
1004 Lausanne
021 625 13 13
Bernstrasse 24A
3072 Ostermundigen
031 931 14 14




# முஸ்லிம் காங்கிரஸ் : முள்ளின் மேல் விழுந்த துணி

- தொல்காப்பியன் -

பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழனாக இருக்க நினைக்கும், சிறிலங்கா முஸ்லிம் காங்கிரசுக்கு கிழக்கு மாகாணசபைத் தேர்தலுக்குப் பின்னர் நெருக்கடிகள் வலுக்கத் தொடங்கியுள்ளது.

சிறிலங்கா முஸ்லிம் காங்கிரஸ் எப்போதெல்லாம் தாமே கிங்மேக்கர் என்று மார் தட்டிக் கொண்டு அரச தரப்புடன் கைகோர்க்கிறதோ, அதிலிருந்து விலக முற்பட்டதோ அப்போதெல்லாம் அதற்கு சோதனையும் வந்து விடுகிறது.

முஸ்லிம் காங்கிரசை நிறுவிய அஸ்ரப்பின் மரணத்துக்குப் பின்னர் அது பல உடைவுகளைக் கண்டுவிட்டது. இப்போதும் கூட, அதாவது கிழக்கு மாகாணசபைத் தேர்தலுக்குப் பின்னர் முஸ்லிம் காங்கிரசுக்குள் புகைச்சல் தீவிரமாகி வருகிறது.

கிழக்கில் அரசுடன் கூட்டணி அமைத்துக் கொண்டது கணிசமான எதிர்ப்பை ஏற்படுத்தியுள்ளது. அவ்வாறு கூட்டணி ஏற்படுத்திக் கொண்ட போதும், அதற்கான உடன்பாட்டை வெளிப்படுத்த முடியாதளவுக்கு முஸ்லிம் காங்கிரசுக்கு நெருக்கடிகள் உள்ளன.

அதேவேளை, இது ரவூப் ஹக்கீம் தன்னிச்சையாக எடுத்த முடிவு என்ற குற்றச்சாட்டு எழுந்தபோது, கொழும்பில் நடத்திய செய்தியாளர்கள் சந்திப்பில் அதைக் கட்சியின் தலைவர்கள் நிராகரித்தனர். ஆனால் அந்தச் சந்திப்பில் ஹக்கீம் கலந்து கொண்டிருக்கவில்லை.

எனினும் அந்தச் செய்தியாளர் சந்திப்பில் முஸ்லிம் காங்கிரஸ் பொதுச்செயலர் ஹசன் அலி ஒரு விடயத்தை ஒப்புக் கொண்டிருந்தார். இந்த உடன்பாட்டை வெளிப்படுத்தினால், இனங்களுக்கு இடையிலான ஒற்றுமை பாதிக்கப்படலாம் என்பதே அந்த விடயம்.

இதிலிருந்து முஸ்லிம் காங்கிரசின் நிபந்தனைகள் அல்லது அரசுடன் ஏற்படுத்திக் கொண்ட உடன்பாடு ஏனைய இனங்களைப் பாதிக்கக் கூடியது என்பதைப் புரிந்து கொள்ளலாம். ஏனைய இனங்கள் என்று பொதுப்படையாகச் சொல்வதைவிட, தமிழரைப் பாதிக்கக் கூடியது என்றே கூறலாம்.

கிழக்கு மாகாணசபையில் சிறிலங்கா முஸ்லிம் காங்கிரசும், ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியும் இணைந்து ஆட்சியமைத்ததால், அங்கு அதிகளவில் வாழும் தமிழ்ச் சமூகத்தின் பிரதிநிதித்துவம் ஒதுக்கித் தள்ளப்பட்டுள்ளது.

கிழக்கு மாகாணசபையில் ஒரு அமைச்சர் கூட தமிழர் இல்லை. தவிசாளர், பிரதி தவிசாளர் பதவி கூட அவர்களுக்கு வழங்கப்படவில்லை.

இதற்குத் தாம் பொறுப்பில்லை என்கிறது முஸ்லிம் காங்கிரஸ். முன்னாள் முதல்வர் சந்திரகாந்தனை அமைச்சராக நியமிக்க ஜனாதிபதி விரும்பியதாகவும், அதற்கு அவர் இணங்கவில்லை என்றும், வேறு தமிழர் எவரையும் அமைச்சராக்கவும் அவர் இடமளிக்கவில்லை என்றும் கூறியுள்ளது முஸ்லிம் காங்கிரஸ்.

அதாவது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் மீது பழியைப் போடுவதற்காகவே, தமிழர்கள் கிழக்கு மாகாணசபையில் புறக்கணிக்கப்பட்டதாக நியாயம் சொல்கிறது முஸ்லிம் காங்கிரஸ். அதேவேளை, தாம் அரசுடன் ஏற்படுத்திக் கொண்ட உடன்பாட்டை வெளிப்படுத்தினால், இன ஒற்றுமைக்கும் ஆபத்து என்றும் அந்தக் கட்சியே சொல்கிறது.

கிழக்கு அமைச்சரவையில் அல்லது அதிகாரத்தில் தமிழர்கள் புறக்கணிக்கப்பட்டதற்கு தாம் பொறுப்பல்ல என்று முஸ்லிம் காங்கிரஸ் நியாயப்படுத்தப் பார்க்கிறது. அமெரிக்கா சென்றிருந்த முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் ரவூப் ஹக்கீம், அங்கு அமெரிக்காவின் உதவி இராஜாங்கச் செயலர் றொபேட் ஓ பிளேக்கை சந்தித்துப் பேசியுள்ளார்.

அப்போது, கிழக்கில் அனைத்துக் கட்சிகளையும் கொண்ட தேசிய அரசு ஒன்றை அமைப்பதற்கு முஸ்லிம் காங்கிரஸ் ஆர்வம் காட்டியதாகவும், ஆனால், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும் அரசாங்கமும் அதில் ஈடுபாடு காட்டவில்லை என்றும் தமது முடிவுக்கு நியாயம் கூறியுள்ளார்.

பிளேக்கிடம் போய் அவர் இந்த நியாயத்தைக் கூறியுள்ளதற்குக் காரணம் உள்ளது. கிழக்கு மாகாணசபையில், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும், முஸ்லிம் காங்கிரசும் இணைந்து ஆட்சியமைப்பதை அமெரிக்கா விரும்பியதாக ஒரு தகவல் ஏற்கனவே வெளியானது.

அதேவேளை. கிழக்கில் தமிழர் ஒருவரை மீண்டும் முதல்வராக்க வெளிநாடுகள் முயன்றதாகவும், அதற்காகவே, றொபேட் ஓ பிளேக் தேர்தல் முடிந்தவுடன் கொழும்பு வந்ததாகவும், முஸ்லிம் காங்கிரஸ் கூறியிருந்தது.

அமெரிக்காவின் இந்த முயற்சியை தாம் தோற்கடித்து விட்டதாக முஸ்லிம் காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவர் செய்தியாளர் சந்திப்பில் மார்தட்டியிருந்தார்.

கிழக்கில் தமிழர் ஒருவரை முதல்வராக்க அமெரிக்கா விரும்பியதா என்பதை உறுதி செய்ய முடியா விட்டாலும், முஸ்லிம் ஒருவரை முதல்வராக்க தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு தயாராகவே இருந்தது என்பது வெளிப்படையானது.

அந்த வாய்ப்பை முஸ்லிம் காங்கிரஸ் உதறித் தள்ளிவிட்டே அரசதரப்புக்கு ஆதரவளித்தது. இந்தநிலையில், முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் ரவூப் ஹக்கீம், தேசிய அரசு அமைப்பதற்கு தமிழ்த் தேசியக் கூட்டமைப்போ அரசதரப்போ ஈடுபாடு காட்டவில்லை என்பதனாலேயே அரசு டன் இணைந்ததாக கூறியுள்ளார். இதில் இரண்டு விடயங்கள் உள்ளன. தாம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் அழைப்பை நிராகரித்ததற்கான நியாயப்பாடுகளை அவர் பிளேக்கிடம் எடுத்துக் கூறவில்லை என்று தெரிகிறது.

அடுத்தது, கிழக்கில் தேசிய அரசுக்கான அழைப்பு ஜனாதிபதியிடம் இருந்து விடுக்கப்பட்டால், அதுபற்றிப் பரிசீலிக்கத் தயார் என்றே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கூறியிருந்தது. ஆனால், முஸ்லிம் காங்கிரஸ் அரசுடன் எல்லாப் பேச்சு க்களையும் நடத்தி முடித்த பின்னரே, தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் ''ஒப்புக்காக'' பேசியது.

இந்தநிலையில், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஒத்துழைக்காததால் தான், தாம் அரசதரப்புடன் இணைந்து கொண்டது போல, அமெரிக்காவில் கா ட்டிக் கொள்ள முற்பட்டுள்ளார் ரவூப் ஹக்கீம். இந்த விடயத்தில் மட்டுமல்ல, திவிநெகும சட்டமூலத்தை ஆதரித்துள்ள விடயத்திலும், முஸ்லிம் காங்கிரசின் நிலைப்பாடு குதர்க்கமானதாகவே அமைந்துள்ளது.

மாகாணங்களின் அதிகாரங்களைக் குறைக்கும் இந்தச் சட்ட மூலத்தை முஸ்லிம் காங்கிரஸ் ஆதரித்ததன் மூலம், அந்தக்கட்சி ஒரு கையறு நிலையில் உள்ளதென்பது உறுதியாகியுள்ளது. ஏனென்றால், முஸ்லிம் காங்கிரசின், மாகாணங்களுக்கு அதிகாரங்களைப் பகிர வேண்டும் என்ற கொள்கைக்கு இது முரணானது.

இருந்தபோதிலும், இந்தச் சட்டமூலத்தினால், மாகாணங்களின் அதிகாரங்களுக்கோ சிறுபான்மை இனங்களுக்கோ பாதிப்பு ஏற்படாது என்று வாய் கூசாமல் கூறியிருக்கிறது முஸ்லிம் காங்கிரஸ்.

முஸ்லிம் காங்கிரஸ் கிழக்கு மாகாணசபைத் தேர்தலின் பின்னர் எடுத்துள்ள முடிவுகள் அந்தக் கட்சிக்கு பெரும் சவாலாகவே முளைத்துள்ளது.

இது முஸ்லிம் காங்கிரஸ் தானாகத் தேடிக்கொண்ட வினையே. கிழக்கில் அரசை ஆதரிக்க முற்பட்டதன் விளைவை முஸ்லிம் காங்கிரஸ் விரைவிலேயே அனுபவிக்கும் என்று கூறியிருந்தார் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா.சம்பந்தன். அந்தக் கருத்து பலித்து விடும் போலவே உள்ளது.

இப்போது முஸ்லிம் காங்கிரசின் நிலை, முள்ளில் விழுந்த துணி போலத் தான் உள்ளது. அந்த முள்ளில் இருந்து துணியை அகற்ற முனைந்தால், சேதம் துணிக்குத் தான்.




ராஜீவ் காந்தி கொலை வழக்கில் அநியாயமாக மரண தண்டனை விதிக்கப்பட்டுத் தான் குற்றமற்றவன் என மன்றாட்டக் கடிதங்களை எழுதிய மூவருள் ஒருவராகிய பேரறிவாளன் எழுதிய வரிகளில் சில வாசகருக்கு தருகிறோம்.

"அய்யா, தாங்கள் அய்யத்தில் நீங்கித் தெளிந்தவர் என்ற நம்பிக்கையோடு இம்முறையீட்டு மனுவை எழுதுகிறேன். கடைசி நம்பிக்கைத் துளிகளும் அற்றுப் போன மனிதனாக மெல்ல சாவை நேசிக்கவும் பழகிவிட்ட பழகக் கட்டாயப் படுத்தப்பட்ட மனிதனாக இதனை எழுதுகிறேன். ஏனெனில் இனத்தின்பால் மொழியின்பால் பற்றுக் கொண்ட ஓர் இளைஞன் தனது கடுமையான உழைப்பால் அர்ப்பணிப்புணர்வால் தமிழர் தம் தலைமையேற்ற வரலாற்றை பதிவு செய்துள்ள "நெஞ்சுக்கு நீதி" அதற்கான விடை பகர்கிறது. நாற்பத்தெட்டாம் அத்தியாயத்தில் தாங்கள் கூறியவற்றை தங்களுக்கு மீண்டும் நினைவூட்டுவதற்கு பொறுத்தருள்க."

"இருபது ஆண்டு சாதாரணமானதா? இளைஞனாக இருந்தால் வனப்பும் வசீகரமும் நிறைந்த வாலிபம். சிறைச் சாலையிலேயே முடிந்து விடுகிறது. நாற்பது வயதுக்கு மேற்பட்ட மனிதனாகத்தான். அவனை வெளியே பிரசவிக்கிறது சிறைச்சாலை.

வாலிபத்தை கடந்த நிலையிலே உள்ளவன் ஆயுள் தண்டனை பெற்றால் வாழ்வின் சுகத்தை இனிமேல் அனுபவிக்க முடியாது என்ற பருவத்திலே சக்கை மனிதனாக அவனை சிறைச்சாலை வெளியே உமுழுகிறது.! ஆயுள் தண்டனையை விட மரண தண்டனை எவ்வளவோ மேலானதுதான்.!"

ஆம் அய்யா, பதினெட்டு ஆண்டு சிறைவாசம் அதிலும் தனிமைச் சிறைச்சாலை-அதனிலும் கொடியதாக எவ்வித பரோல் விடுப்பும் இல்லாத நீண்ட நெடிய சிறைவாசம் இவையெல்லாம் சிறிய துன்பங்களே எனக் கூறும் அளவிற்கு சாவின் நிழலில்தான் வாழ்வே நகர்த்த வேண்டும் என்ற துன்பத்தின் எல்லை சாவுத் தண்டனை எமது வழக்கில் தவிர வேறு எவருக்கு இந்நிலை ஏற்பட்டிருக்கும்? அய்யா கற்பனை செய்ய முடிகிறதா தங்களால்? கற்பனை எல்லைகளுக்கு அப்பாற்பட்டது எமது துன்பம். அதன் பின்னரும் இம்மனுவினை நல்ல மன நிலையோடு என்னால் எழுத முடிகிறதென்றால் நீதியின்பால் எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கை. கொள்கை எனக்களித்த மனஉறுதியுமே காரணங்கள் ஆகும்.

அய்யா இனியும் நான் எனது தூக்கினை குறைக்கும் வேண்டுதலோடு எனது முறையீட்டை தங்கள் முன்வைக்கத் தயாரில்லை.எனக்கு விடுதலை வேண்டும். ஒரு ஆயுள் சிறைவாசியைக் காட்டிலும் கூடுதலான துன்பத்தினை நான் அனுபவித்து விட்டேன்.

எனவே எனக்கொரு முடிவு எனது நிலைக்கோர் முற்றுப் புள்ளி விழவேண்டும்.

அதற்கு உகந்த தருணம் பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் நூற்றாண்டு விழா என்ற உறுதியான நம்பிக்கையோடு இம்மனுவை அளிக்கிறேன். தயவு கூர்ந்து கருணைமனு நடுவன் அரசின் பரிசீலனையில் உள்ளது என்ற வழமையான காரணங்களைக் கூறி எனது கோரிக்கையினை நிராகரித்து விடாதீர்கள். ஏனெனில் நான் கோருவது எனது கருணை மனு மீதான முடிவினை அல்ல. மாறாக பேரறிஞர் அண்ணா அவர்களின் நூற்றாண்டு சிறப்பினை ஒட்டி விடுதலை ஆணையே ஆகும்.

அரசியல் யாப்பு மாநில அரசுக்கு அதற்கான அதிகாரத்தினை வழங்கி உள்ளது என்பதை நான் சுட்டிக்காட்டுவது அவசியமற்றது எனக் கருதுகிறேன். ஏனெனில் இம்மாநிலத்தினை மட்டுமல்ல இந்நாட்டினையே வழிநடத்தக் கூடிய நெருக்கடிகளிலிருந்து மீட்கக் கூடிய இடத்தில் உள்ளவர் தாங்கள்.

தனது ஒரு கையெழுத்து மூலமே மூன்று அப்பாவி இளைஞருக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கக் கூடிய ஒருவரிடம் இத்தனை கெஞ்சியும் இரக்கமே கொள்ளாத அரக்க மனம் கொண்டவருக்கு எப்படி கருணாநிதி என்ற பெயர் கிடைத்தது?

பேருக்கும் ஆளுக்கும் பொருத்தமே இல்லாத மனிதர்களில் 5 முறை தமிழகத்தின் முதல்வராகக் கொடிகட்டி கோலோச்சிய கலைஞர் கருணாநிதியும் ஒருவர் என்பதை தமிழர் எவரும் எளிதில் கூறிவிடுவர் எனலாம். அதுவும் ஈ.வே.ரா. பகுத்தறிவுப் பாசறையில் புகுந்து அண்ணாத்துரையின் நிழலில் அரசியல் நடத்தியவரின் பெற்றோர் வைத்த பெயர் தட்செணமூர்த்தி என்பதை கருணாநிதி என விரும்பி ஏற்றுக் கொண்ட பெயர் இப்படியா இருக்கணும்?

ஒருவேளை எண்சோதிட முறையில் எடுத்துக் கொண்டிருக்கலாமோ என எண்ணத் தோன்றுகிறது. பேசுவது பகுத்தறிவு என்றாலும் அத்தனையும் அரசியல் போலி வேடம் என்பதை அவரது அரசியலே காட்டி விடுகிறது. நாக்கூசாமல் எம்.ஜி.ஆரை மலையாளி என மேடைகளில் பேசி அரசியல் செய்தார். கண்ணதாசன் இல்லற ஜோதி படத்தில் எழுதிய அனார்க்கலி நாடகத்தைத் தமது எனக் கூறிப் புகழ் தேடினார். இப்படி முள்ளிவாய்க்கால் தமிழினப் படுகொலைவரை அவரது கரங்கள் படாத இடமே இல்லை.

ஒரு நாளைக்குக் கறுப்புச் சட்டை போடுவார் மறுநாள் மஞ்சள் காவியோடு காட்சி தருவார். அவரது பேச்சு நடை உடை பாவனை அனைத்தும் முரண்பாடுகளின் மொத்த வடிவம் எனலாம். அவரையும் தி.மு.க.வையும் ராஜீவ் காந்தி கொலை தொடர்பாக விசாரிக்கப்பட வேண்டும் என மத்திய புலனாய்வுத் துறை கூறிய போது அதனைச் செய்யவிடாது தடுக்கும் அளவுக்கு அவரது கரம் பலமாக இருந்தது. எனவேதான் யாராவது சிலரைக் கொலைக் குற்றவாளிகள் எனத் தூக்கில் போட்டுவிட்டால் தன்மீது உள்ள சந்தேகம் மறைக்கப்பட்டு விடும் என்ற நச்சு மனம் படைத்தவர் என்பதை நிரூபித்துவிட்டார். இவரால் எமக்கு ஈழம் கிடைக்கும் என எவராவது பேசினாலோ நம்பினாலோ அதனை விட அற்ப புத்தி படைத்தவர் யாரும் இருக்கமுடியாது.

**அன்பிற்கினிய அகரம் வாசகர்களே..!**
**உங்களில் பலர் சிறுகதை எழுதும் ஆற்றல் படைத்தவர்களாக இருப்பீர்கள். உங்கள் ஆற்றலுக்குக் களம் அமைத்துக்கொடுக்க அகரம் முன்வருகிறது. "விழியோரம் வலி" என்ற தலைப்பில் உங்கள் மனதைப் பாதித்த விடயங்களைக் கதைகளாக்கி எமக்கு அனுப்பி வையுங்கள். ஆசிரியர் குழாமினால் தெரிவுசெய்யப்படும் கதைகள் அகரம் இதழில் பிரசுரிக்கப்படும்..!**

# சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி விடுவதில்லை !



இலங்கை அகதிகள் விடயத்தில் நீதி மன்றங்கள் நீதி வழங்க முன்வந்தாலும் அந்தந்த நாடுகளின் அதிகாரிகள் அப்பாவித் தமிழ் அகதிகளுக்கு அநீதி வழங்குபவர்களாகவே காணப் படுகின்றனர். இந்நிலை இந்தியாவில் தமிழ் நாட்டிலும் சரி அவுஸ்திரேலியா, இலண்டன், கனடாவாயினும் சரி நடந்தேறி வருவது கவலை தருகின்றது.

தமிழகத்தில் நீதிமன்றம் விடுதலை வழங்கிய அடுத்த நிமிடமே ஏதாவது ஒரு காரணம் காட்டி காவல்துறை அவர்களை மீளவும் சிறைக்குள் பூட்டி விடுகின்றனர். தப்பி வெளிநாடுகளுக்கு ஓடினாலும் விரட்டிப் பிடித்து உள்ளே போடும் கொடுமை தொடருகிறது. 1983 முதல் கடந்த 29 வருடங்களாக வேலை வெட்டி, நடமாடும் சுதந்திரம், நிலையான வருமானம் ஏதும் இல்லாது பட்டி தொட்டிகளில் வாழும் மந்தைகளாக வாழும் நிலைக்குத் தள்ளப்பட்ட சுமார் ஒரு இலட்சம் அகதிகள் நிலை முடிவற்ற சோகமாக உள்ளது.

ஆனால் இவர்களுக்காகத் தமிழக அரசியல்வாதிகளும் அமைப்புகளும் மட்டுமே ஏதாவது செய்யத் துடித்து வருகின்றனர். ஆயினும் அவர்களின் அரசியல் பலம் அற்பமாக உள்ளதால் ஆகும் பலனும் மிக அற்பமே. எமது அரசியல் தலைவர்கள் தமிழகத்தில் குடும்பங்களாக சுகம் அனுபவித்தும் டெல்லிவரை போய் வந்தாலும் எமது அகதிகளுக்கு ஆதரவாக அங்கு எதுவும் பேசாத செய்யாத முண்டங்களாகவே இருந்து வருகின்றனர்.

அகரம் ஜூன், ஜூலை இதழில் எழுப்பிய அவுஸ்திரேலிய ஈழத் தமிழ் அகதிகள் படும் அவதிகள் பற்றி எழுப்பியதன் பலனாய் எமது தமிழ் மக்கள் அவர்கள் சார்பில் நடத்திய பலத்த போராட்டத்தின் பலனாக அங்கே அகதிகள் பற்றிப் பாரிய மாற்றங்களுக்கு அந்நாட்டு உயர் நீதி மன்றம் அளித்த தீர்ப்பு வழி செய்தது. ஆயினும் அங்கிருந்து வரும் செய்திகள் தமிழ் அகதிகளைத் தனித் தீவுகளில் தங்க வைக்கும் கொடுமை இடம் பெறுவதாகத் தெரிவிக்கின்றன.

சிலர் இத்தகைய தனிமையைத் தாங்க முடியாது தாமாகவே மீள இலங்கைக்குத் திரும்புவதாகவும் அதனால் அவுஸ்திரேலிய அரச அதிகாரிகளின் ஈழத் தமிழ் அகதிகள் மீதான பார்வை மோசமடைந்து காணப் படுவதாகவும் செய்திகள் கூறுகின்றன.

இது போன்றே இங்கிலாந்து நீதிமன்றம் வழங்கும் தீர்ப்புகளும் தமிழ் ஈழ அகதிகளைப் பொறுத்த வரை முழுமையான பலனை அனுபவிக்க முடியாதபடி அதிரடி நாடு கடத்தல்கள் தொடருகின்றன. ஆனால் இலங்கை அரசின் உளவாளிகள் எனப்படுவோர் பிரித்தானிய அகதித் தஞ்சம் பெற்றுக் கொள்வதோடு உண்மையான ஈழ அகதிகள் பற்றிய பொய்த் தகவல் வழங்கித் தஞ்சம் பெற்றுக் கொடுத்த சட்டத்தரணிகளையே சிக்கலில் மாட்டி வருவதாகத் தெரிகிறது.

இத்தகையோரால் அவுஸ்திரேலிய ஈழத் தமிழ் அகதிகள் மீள முடியாது தடை முகாமில் வாழுங்காலம் முழுவதும் சிறைவாசம் அனுபவிக்கும் கொடுமை ஏற்பட்டுள்ளது என்பது பழைய செய்திகள். இது போன்ற நிலை பிரித்தானியாவிலும் தமிழ் அகதிகளுக்கு ஏற்படாத வண்ணம் அங்குள்ள தமிழ்த் தொண்டர் நிறுவனங்கள் கவனம் செலுத்துவது அவசியம் என அகரம் நினைவு படுத்துகிறது.

கனடாவிலும் நிலைமை பெருமைப்படும் படியாக இல்லை. உதாரணமாக மக்கள் பிரதிநிதியாக இருந்து படு கொலை செய்யப் பட்ட திரு.யோசப் பரராசசிங்கம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் என்ற உண்மையைக் கூட கவனத்தில் கொள்ளாது அவரை ஒரு புலிப் பயங்கரவாதி எனவும் அதனால் அவரது பாரியார் அகதித் தஞ்சம் மறுக்கப்பட்டுள்ளமை எவராலும் ஏற்க முடியாத ஒன்றாகும். மேலும் புலிகள் இயக்கத்துக்குப் பணம் சேர்த்தனர் என்ற காரணத்தால் சில செயற்பாட்டாளர்கள் நாடு கடத்தப் படும் செய்தி தமிழ் மக்கள் அனைவராலும் கடுமையான கண்டனத்துக்கும் எதிர்ப்புக்கும் உள்ளாக்கப்பட வேண்டும். நாம் ஏன் எமது தரப்பு நியாயத்தை முன்நிறுத்திப் போராட த.தே.கூட்டமைப்பை வற்புறுத்தத் தயங்க வேண்டும்?.

# மண்ணில் வீழா மழைத்துளிகள்...

## துறவறம்

காவி கட்டி
கையில் குண்டலத்தோடு
இல்லாத ஒன்றை இருப்பதாகச் சொல்கிறான்
சாமி..,
கழுத்தில் நஞ்சு கட்டி
கையில் துப்பாக்கியோடு
இல்லாமல் போனதை எடுப்பதற்காய் வீழ்கிறான்
போராளி..!!!

## உறுதி

குருதி வழியும்
இறுதி நொடியிலும்
உருகி உளறுகிறது வாய்.....
தமிழீழம்

## கரும்புலி

பேசும்போது பனித்துளி,
மூசும் போது தீப்பொறி....
மொத்தத்தில்
கந்தகத்தால் நெய்யப்பட்ட
சந்தன மேனி..!

## விடுதலை தந்த மூச்சு!

தலைமகனே!
தலைகுனியாத் தமிழனாக,
இறுதிவரை போராடி
இலங்குபுகழ் ஈழமதின்
அணையாச் சுடரானாய்
உனை மறக்க முடியாமல்
உள்ளமெல்லாம் நீ நிறைந்தாய் ...!
ஆ+ர்

## குப்பி

மரணம்
மண்டியிட்டுக்கிடக்கிறது..,
போராளியின் கழுத்தில்...!

## மாவீரர் நாள்

தியாகம் என்றும்
திறனற்றுப்போகாது என்ற
திடமான நம்பிக்கையோடு
தீரர்களான வீரர்கள்
தீயாகிப்போன நாள்.
-பவானி கந்தசாமி-

"மண்ணில் வீழா மழைத்துளிகள்" என்ற தலைப்பில் உங்கள் மனதிலிருக்கும் புதிய சிந்தனைகளை 4 - 6 வரிகள்கொண்ட கவிதையாக்கி எமக்கு அனுப்பிவையுங்கள்.

tMedia Network - PO BOX 4153, 59037 Hamm - Germany - eMail: editor@akram.eu





## என்றென்றைக்கும் வாழ்வீர்!

ஊர் வாழ உறவு வாழ
உற்றம் சுற்றம் உரிமையோடு வாழ
வீரமறவர்களாய் வேங்கையின் மைந்தர்களாய்
மானிடத்தின் அதி உச்ச ஈகமாக
மார்தட்டி நின்றோரே....
புகழ் பூத்த விடுதலை வரலாற்றில்
என்றென்றைக்கும் வாழ்வீர்!
ஆ+ர்

## மாவீரர்!

உரிமைகள்
உறங்கக்கூடாது
என்பதற்காக
உயிர்களை உதறிவிட்டு
உறங்கும்....
உன்னத ஆன்மாக்கள்!
-மகிழினி காந்தன்-

## பெண்புலி

நான்கு சுவர்களுக்குள்
நாணிக்கிடந்தவள்
வீசுகிறாள் புயலாய்....,
விடுதலை உணர்வு தந்த
வீரியத்தால்...!!!

## மாவீரர்!

மாவீரர் இல்லமதை
மண் மேடாக்கி அரசு
அரச மரம் நட்டாலும்
அப்போதும் வளரும்
எம் மாவீரர் நினைவு !
-பாக்கியம்-

## ஏன் மரித்தாய்

அழியவே பிறந்தாயோ – என்
அழகு மகவே
ஆகாய மீன் நீ – புவியில்
அருமைச் சின்னமாய்
நான்...
அவனியில் உயிர் சுமக்க – என்
அன்பே ஏன் மரித்தாய்?
-கௌசிகா.க, அகவை 15-

## உறுதி கூறுகின்றோம்!

எம்மைக்காக்க எம் தேசம்காக்க ஈகம் ஆனவரே !
உங்கள் உணர்வோடு எங்கள் தலைவன் வழியில்,
இறுதி வெற்றிவரை உறுதியோடு போராடுவோம்,
உங்கள் உணர்வுகளை வெல்லும்வரை
நாம் ஓயமாட்டோம் என உறுதி கூறுகின்றோம்...!
ஆ+ர்






# திவிநெகும சட்டமூலத்திற்குப் பலிக்கடாவாகும் 13ஆவது திருத்தச் சட்டம்

-இலட்சுமணன்-

இலங்கையில் நிலவும் அநேகமான அரசியல் குழப்பங்களுக்கு அங்கு அமுலில் உள்ள அரசியலமைப்பே காரணம் என்பதை இலகுவில் சொல்லி விடலாம். அதனை நிரூபிப்பதைப் போலவே கடந்த மாதம் முதல் இரண்டு சட்டமூலங்கள் இலங்கைத் தீவைக் கலக்கிக் கொண்டிருக்கின்றன. அதில ஒன்று 13 ஆவது திருத்தச் சட்டம், மற்றையது திவிநெகும சட்டமூலம்.

அரசுத் தலைவர் மகிந்த ராஜபக்ஷவின் சகோதரரும் பொருளாதார அபிவிருத்தி அமைச்சருமான பசில் ராஜபக்ஷவினால் முன்மொழியப்பட்ட திவிநெகும திட்டத்தினை நடைமுறைப் படுத்துவதற்கு ஒன்றிணைக்கப்பட்ட புதிய கிராமிய அபிவிருத்தித் திணைக்களம் ஒன்று அமைக்கப்படவுள்ளது.

சமுர்த்தி ஆணையாளர் திணைக்களம், இலங்கை சமுர்த்தி அதிகார சபை, சிறிலங்கா மேல்நாட்டு கிராமிய புனரமைப்பு திணைக்களம், சிறிலங்கா தெங்கு அபிவிருத்தி அதிகார சபை ஆகிய ஐந்து நிறுவனங்களையும் ஒன்றிணைத்தே இந்தத் திணைக்களம் அமைக்கப்படவுள்ளது.

இச்சட்டமூலம் நிறைவேற்றப்படுவதில் மாகாண சபைகள் சட்டம் தடை போட்டதனைப் பார்த்த பொருளாதார அபிவிருத்தி அமைச்சர் பசில் ராஜபக்ஷ மற்றும் அவரது சகோதரர் கோத்தபாய ராஜபக்ஷ ஆகியோர், இந்திய - இலங்கை ஒப்பந்தத்தால் உருவான 13ஆவது திருத்தச்சட்டத்தை நீக்கப் போவதாக அறிவித்திருக்கின்றனர். அதனையடுத்து அவர்களுக்குப் பின்னால் இருக்கும் ஊதுகுழல்களான விமல் வீரவன்ச போன்றவர்களும் அதனை ஆதரிக்கும் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். இதனைத் தொடர்ந்து 13ஆவது திருத்தச் சட்டம் தொடர்பில் பல்வேறு வாதப் பிரதிவாதங்கள் நடைபெற்று வருகின்றன.

சுதந்திரத்துக்குப் பின்னான இலங்கையில் சிறுபான்மையினருடன் அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்வதில் ஒரு ஆரம்பப் படியாக ஏற்படுத்தப்பட்டதே 13ஆவது திருத்தச்சட்டமாகும். இது கூட இலகுவில் கிடைத்த ஒரு விடயமல்ல. பல்லாயிரக் கணக்கான உயிர்களை இழந்து, பெரும் சொத்தழிவுகளுக்குப் பின்னர் கிடைத்த ஒன்று.

இலங்கையில் இனவாத ஆட்சியாளர்களால் பல ஒப்பந்தங்கள் செய்யப்பட்டு அனைத்தும் கிழித்தெறியப்பட்டதே வரலாறாகும். இந்த ஒப்பந்தங்கள் யாவும் இலங்கைக்குள், சிங்கள ஆட்சியாளர்களால் சர்வதேசத்தின் எந்தவித அனுசரணையோ, மேற்;பார்வையோ, கண்காணிப்போ இன்றி ஏற்படுத்தப்பட்டமையே இதற்குக் காரணமாகும். அது மட்டுமன்றி தமிழ் மக்களின் உரிமை சார்ந்த விடயத்தில் எந்தவிதமான விட்டுக் கொடுப்பையும் மேற்கொண்டுவிடக் கூடாது என்னும் பேரினவாத மனப்பாங்கும் ஒரு காரணமாகும்.

இலங்கையின் சிறுபான்மை இனங்களுக்கான அதிகாரப் பகிர்வு விடயத்தில் சர்வதேசத்தின் கவனம் அதிகரித்துள்ள நிலையில், இலங்கை அரசின் குற்றங்களைக் கண்டுபிடித்து விசாரிப்பதற்கான சூழல் பலமடைந்திருக்கின்ற நிலையில், 13ஆவது திருத்தச் சட்டத்தை நீக்குவதை அனுமதிக்கக் கூடாது என்பதே தமிழ்த் தரப்பினது கருத்தாகும்.

இலங்கை அரசாங்கமோ சிறுபான்மை இனங்களுக்குத் துரோகத்தை விளைவித்தவாறு, சர்வதேசத்தின் கண்ணில் மண்ணைத் தூவியும், ஏமாற்றியும், ஒருபக்கச் சார்பான குடும்ப ஆட்சியை நடத்தி வருகிறது.

பல தசாப்தங்களாக, ஒப்பந்தங்களால் ஏமாற்றப்பட்டு விரக்தியின் விளிம்பில் தமிழ் மக்கள் இருக்கையில், இலங்கை இந்திய ஒப்பந்தத்தின் ஊடாக உருவாக்கப்பட்ட 13 ஆவது திருத்தச் சட்டம் இல்லாதொழிக்கப்பட்டால் அற்ப சொற்ப உரிமைகளை வழங்கும் மாகாண சபை முறைமை ஒழிக்கப்பட்டுவிடும். முன்னைய வட கிழக்கு மாகாண சபை, தற்போதைய கிழக்கு மாகாண சபை என்பவற்றின்; ஊடாக சிறுபான்மை மக்கள் அடையும் சிறிதளவு அதிகாரப் பரவலாக்கலாவது இல்லாதொழிக்கப்பட்டால் தமிழ் மக்களின் அனைத்து நம்பிக்கைகளும் பொய்த்துப் போகும்.

சொல்லில் மாளாத கொடுமைகளையும் இழப்புகளையும் சந்தித்த ஒவ்வொரு தமிழருக்கும் 13 ஆவது திருத்தச் சட்டத்தில் பங்கு உண்டு, தாம் அனுபவித்த கொடுமைகளால், தாங்க முடியாத வலியுடனேயே தமிழ் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை இந்த இடத்தில் யாரும் மறந்து விடக் கூடாது.

இந்நிலையில், தற்காலிகமாக இணைக்கப்பட்ட வடக்கு கிழக்கை நிரந்தரமாக இணைப்பதற்கு கிழக்கில் சர்வஜன வாக்கெடுப்பை நடத்த முன்வராத அரசுத் தலைவர், தனது சகோதரர்களான பாதுகாப்புத் துறைச் செயலாளர், பொருளாதார அபிவிருத்தி அமைச்சர் ஆகியோர் கூறியதற்காக 13 ஆவது திருத்தச் சட்டத்தை அகற்றுவதற்கு முற்பட்டால் தமிழ் மக்கள் மீண்டும் ஒருமுறை கிளர்ந்தெழுவது நிச்சயம்.

தற்காலிகமாக இணைக்கப்பட்ட வடக்கு கிழக்கை நிரந்தரமாக இணைப்பதற்கு கிழக்கில் சர்வஜன வாக்கெடுப்பை நடத்த முடியாத அரசாங்கம், பாதுகாப்புச் செயலாளர், பொருளாதார அபிவிருத்தி அமைச்சரின் ஆலோசனையைக் கேட்டு 13ஆவது திருத்தச்சட்டத்தை அகற்றுவதற்கு முற்பட்டால் தமிழ் மக்கள் கிளர்ந்தெழுவது திண்ணமாகும் எனத் தமிழ் தேசியக் கூட்டமைப்பின் கிழக்கு மாகாண சபை உறுப்பினரும் கிழக்கு மாகாண சபையின் எதிர்க்கட்சி பிரதம கொரடாவுமான இரா. துரைரெட்ணம் தெரிவித்துள்ளார்.

அதே நேரம், 13ஆவது திருத்தச்சட்டம் இல்லாதொழிக்கப்படுதல் என்பதற்கே இடமில்லை. தமிழ் மக்களுக்கான உரிமை சார்பிரச்சினைகளுக்கான தீர்வின் ஆரம்ப வடிவமாக ஏற்றுக்கொள்கின்ற, அதனைப் பாதுகாக்கின்ற நிர்ப்பந்தத்தின் நெருக்கடியில் இருந்து கொண்டு, 13ஆவது திருத்தச்சட்டத்திற்கு வழங்கப்பட வேண்டிய முழு அதிகாரத்தினையும் கேட்கின்ற நிலைமையில், இதற்காக சர்வதேசம் இலங்கை அரசாங்கத்தைத் துணிந்து அழுத்தங்களைப் பிரயோகிக்கின்ற சூழ்நிலையில் இச் சட்டத்தினை அகற்றுவதற்கு எடுக்கப்படும் முயற்சி சிறுபான்மையினருக்கு துரோகத்தையே செய்வதாக அமையும்.

எனவே இந்த 13ஆவது திருத்தச்சட்டத்தினை அகற்றும் நடவடிக்கைகள் அனைத்தினையும், இலங்கை அரசாங்கத்தின் ஒருபக்கச் சார்பான ஆட்சியாளர்கள் மேற்கொள்வதனை தடுத்து நிறுத்த தமிழ் மக்களும், சர்வதேசமும் ஒருங்கிணைந்து செயற்படவேண்டும் என அறைகூவல் விடுக்கிறேன். அத்தோடு சிறுபான்மையினருக்கு வழங்கப்பட வேண்டிய முழுத்தீர்வையும் வழங்குவதற்கும் முன்னின்று உழைக்க வேண்டும் என அவர் தெரிவித்திருக்கிறார்.

13ஆவது திருத்தச்சட்டத்தினை அகற்றும் விடயத்தில், ஆளும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியில் அங்கம் வகிக்கும் இடதுசாரிக் கட்சிகளின் தலைவர்களான வாசுதேவ நாணயக்கார, திஸ்ஸ வித்தாரண, டியூ குணசேகர உள்ளிட்டோர், பாதுகாப்புச் செயலாளரின் கூற்றை வன்மையாகக் கண்டித்திருந்தாலும், அமைச்சர் பஸில் ராஜபக்ஷ உள்ளிட்ட அரச தரப்பின் முக்கிய புள்ளிகள் அதனை வரவேற்றுள்ளனர். இதனால் தொடங்கிய அமளி நாட்டிற்குள் மாத்திரமின்றி இந்தியா உட்பட சர்வதேசம் வரை கலக்கிக் கொண்டிருக்கிறது.

13ஆவது அரச்மைப்புத் திருத்தம் நாட்டின் அபிவிருத்திக்கும், நிர்வாகத்துக்கும் தடங்கலாக உள்ளது. எனவே, அரசு அதை உடனடியாக அரசமைப்பிலிருந்து நீக்கவேண்டும் என்ற கோசம் தொடங்குவதற்கான ஆரம்பப் புள்ளியாக திவிநெகும சட்டமூலமே அமைந்திருந்தது.

நாட்டின் அபிவிருத்தியை நோக்காகக் கொண்டு மேற்கொள்ளப்படும் திவிநெகும சட்டமூல நிறைவேற்றத்தில், 13ஆவது திருத்தச் சட்டம் மாத்திரமல்ல நாட்டின் அபிவிருத்திக்குத் தடையாக இருக்கும் எந்தச் சட்டத்தினையும் நீக்குவதற்கு நடவடிக்கை எடுக்கப்படும் எனப் பசில் ராஜபக்ச தெரிவித்துள்ளார்.

13ஆவது அரசமைப்புத் திருத்தத்தில் பொலிஸ், காணி அதிகாரங்கள் உள்ளிட்ட தனிநாட்டுக்கான விடயங்கள் உள்ளன. சிலவேளை, வடமாகாண சபை அமைந்தால் இந்த அதிகாரங்களைப் பயன்படுத்தி தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு தனி ஈழத்துக்கான பிரகடனத்தை முன்வைக்கலாம் என்று அச்சப்படும் ஆளும் கட்சியினர் வட மாகாணசபையினை அமைப்பதில் காலத்தினை இழுத்தடித்து வருகின்றனர் என்ற வகையான கருத்துக்களுக்கு தற்போது இதன் மூலம் ஒரு பதில் கிடைத்திருப்பதாகவும் கொள்ள முடியும்;.

அதேநேரம் கிழக்கு மாகாண சபையினைக் கலைத்துத் தேர்தலை நடத்தி, ஆளுங் கட்சியில் இருந்து விலகி தேர்தலில் தனித்துப் போட்டியிட்டு 7 ஆசனங்களைக் கைப்பற்றிக் கொண்ட சிறிலங்கா முஸ்லிம் காங்கிரசை இணைத்துக் கொண்டு ஆட்சியமைத்தமைக்கும் இந்த வட மாகாணசபை விவகாரம் ஒரு காரணம் என்றே தோன்றுகிறது.

13ஆவது திருத்தச் சட்டத்தை அரசாங்கம் முழுமையாக நடைமுறைப்படுத்துவதில் காலம் தாழ்த்துவதற்கு மனநோய் போன்ற அச்சமே காரணம். எதற்கெடுத்தாலும் விபரீதமாகவே சிந்திக்கும் மனோபாவம் மிகவும் மோசமான விளைவுகளை ஏற்படுத்தும்.

இந்த இடத்தில் இந்தியாவின் பங்கு பிரதானமானது. ஐக்கிய நாடுகள் சபையில் இலங்கைக்கு எதிராகக் கொண்டு வரப்பட்ட பிரேரணைக்கு ஆதரவளித்ததிலிருந்து இலங்கையுடன் ஒரு எதிர்ப்பைச் சம்பாதித்துக் கொண்டிருக்கும் இந்தியா எவ்வாறு தன்னால் உருவாக்கப்பட்ட 13ஆவது திருத்தச் சட்டத்தினை அகற்றும் விடயத்தில் இராஜதந்திரத்தைப் பயன்படுத்தப் போகிறது என்பது பொறுத்திருந்து பார்க்கப்பட வேண்டிய விடயம்.

இலங்கையில் எதனை நடத்தி முடிக்க நினைத்தாலும் அதனை எத்தகைய வழியிலேனும் நிறைவேற்றியே தீருவோம் என்ற பாணியில், சர்வாதிகாரத் தன்மையுடனான ஆட்சியை நடத்தி வரும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி அரசாங்கம் எடுத்த முயற்சியை இலகுவில் கைவிடாது எனவே எதிர்பார்க்கலாம்.

தொடர்ந்தும் மாகாண சபைகளால் தமது முயற்சிகள் தோற்றுப்போவதை ஏற்றுக் கொள்வதில் அரசாங்கத்திற்கு எந்த உடன்பாடும் இருக்கப் போவதில்லை என்பதாலேயே கிழக்கு மாகாணத்தில் தம் சொல்லுக்கு மறுபேச்சுப் பேசாத முதலமைச்சரை நியமித்திருக்கிறது .

ஏற்கனவே முன்மொழியப்பட்டு நிறைவேற்றப்படாது போன நாடு நகரத் திருத்தச் சட்டமூலம் போன்று திவிநெகும சட்டமூலமும் மாறாதிருப்பதற்கு அரசு எத்தகைய தந்திரத்தை மேற்கொள்ளும் என்பதே தற்போதைய கேள்வி.



TTS BROTHERS
ASIEN SUPERMARKT
மரக்கறி வகைகள்
மசாலா வகைகள்
நகை & அலங்காரப் பொருட்கள்
உங்கள் வீட்டு தேவைக்கான அனைத்து
மளிகை பொருட்கள்-ஆடை அணிகளன்கள்
முதல் அனைத்து தேவைகளுக்கு
நாடவேண்டிய ஒரே ஸ்தாபனம்.
எமது வாடிக்கையாளர்களின்
வேண்டுகோளுக்கிணங்க எமது புதிய
கிளையை பொன் (Bonn) இல் தொடங்கி
உள்ளோம் என்பதை மிக்க மகிழ்சியூடன்
தெரியப்படுத்துகிறோம்.
TTS ASIEN SUPERM
TTS BROTHERS
பொன்(Bonn)
கடையில்
நவம்பர் மாதம்
முழுவதும் சிறப்பு
மலிவு விற்பனை
நடைப்பெறும்.
Rheinische Str.52
44137 Dortmund
Tel.: 0231 819288
Johannes Str.35
53225 Bonn Beuel
Tel.: 0228 40377846
Helmholtz Str.11
46045 Oberhausen
Tel.: 0208 202829



# நள்ளிரவில் காதிலெழும் நாதமணிப் பேரொலியில் நாளை ஒரு பூ மலரும்....

-கிருஸ்ணா அம்பலவாணர்-

ஈகம் செய்து, தியாகம் புரிந்து, இழப்புக்களைச் சந்தித்து, வேதனைகளைச் சுமந்து, சொல்லடிகளைத் தாங்கி, அச்சுறுத்தல்களைச் சவாலாய் எதிர்கொண்டு...
அன்புக்கினியவர்களே!

மானுட வாழ்வில் ஜனனமும் மரணமும் நியதியானவை. இந்த நியதிக்குள் மானுடவியல் கோட்பாடு சொல்லும் தத்துவம் என்பது ஜனனத் தின் தோற்றம் உலகுக்கு மரணத்தின் வாயிலாகச் சொல்லும் செய்தி என்ன என்பதே. இது விடுதலையை எழுதத்துடிக்கும் எம் இனத்துக்கும் பொருந்தக் கூடியதே. காரணம் எமது இனத்தின் ஜனனமும் மரணமும் விடுதலைக்கானதே! உலக மானுடத்தின் வரலாற்றுப் பதிவுகளில் எம் இனத் தின் உயிர்த்துறப்பு என்பது உன்னதமானது! உயர்வானது!

நவம்பர் 27 எம்மண்ணுக்கு வீரம் விளைந்துவிட்டது என்பதை உரத்த குரலெடுத்து உலகுக்குச் சொல்லும் நாள்.

உரிமை பெறத் துடிக்கும் உன்னதமான இனத்தை இனியும் அடக்கி வைத்து அடிமைப்படுத்த முடியாது என்பதை உலகுக்கு உரக்கச் சொன்ன உன்னதமான நாள்.

ஈகம் செய்து, தியாகம் புரிந்து, இழப்புக்களைச் சந்தித்து, வேதனைகளைச் சுமந்து, சொல்லடிகளைத் தாங்கி, அச்சுறுத்தல்களைச் சவாலாய் எதிர்கொண்டு, கூட இருப்பவனே கொள்கையை, தியாகத்தை அர்ப்பணிப்பை அதன் உயர்வை விளங்கிக் கொள்ளாமல் செய்யும் காரியங்களை தாங்கிக் கொண்டு உயிரைக் கொடுத்தாவது உரிமையைப் பெறுவோம்! பெறமுடியும்! என்பதை முதற்சாவு மூலம் முரசறைந்த நாள்!

மாவீரர் நாள் தமிழீழத்தின் தேசிய நாள்! உலகத் தமிழர்கள் போற்றும் உன்னதமான தேசிய நினைவெழுச்சி நாள்!சத்தியநாதன் என்கின்ற சங்கர் தன்னுயிர் தந்து தமிழர் வரலாற்றில் சரித்திரமாகிய நாள்!

வரலாறு தந்த வல்லமையாகிய எங்கள் தலைவன் தமிழினம் தலைநிமிர்ந்து நிற்க வேண்டும் எனச் சிந்திப்பதற்கு முன் எதிரி எட்டி உதைத்தாலும் உதைத்த காலுக்கு முத்தமிட்டு, சேவகம் செய்து கிடந்தது எங்கள் இனம். வன்முறையற்ற அகிம்சை வழிமுறை தழுவி எமது இனம் உரிமையைக் கேட்ட போதெல்லாம் சிங்களப் பேரினவாதம் கொடுவாள் கொண்டு குண்டர்கள் மூலம் தமிழின அழிப்புத் தாண்டவத்தைப் புரிந்து வந்தது. வடக்கிலிருந்து கிழக்கிற்கும் கிழக்கிலிருந்து தெற்கிற்கும் தமிழன் செல்லும் போதெல்லாம் தாயகம் அற்றவன் போல சிங்களப் பேரினவாதம் நிற்கவைத்து நீ யார்? எனக் கேள்விகள் கேட்டு, கொடுமைப்படுத்தியது. பரிசோதனை என்கின்ற போர்வையில் தமிழ் பெண்களின் மீது பாலியல் சேட்டைகளைப் புரிந்து கொடுமைப் படுத்தியும் வந்தது. இத்தனை கொடுமைகளையும் கூனிக் குறுகிப் பொறுத்தவாறு என்ன செய்வதென்று தெரியாது ஏங்கிக் கிடந்தது எம் இனம்.

இந்தக் கொடுமைகளுக்கு எல்லாம் முற்றுப்புள்ளி வைத்து முழுத்தமிழரையும் வீறு கொண்ட இனமாக உருவாக்குதற்காக நவம்பர் 26 இல் சூரியத் தேவனாக எம் தலைவனின் தரிசனம் தமிழினத்துக்குக் கிடைத்தது! தமிழினம் விழி திறந்தது!

நவம்பர் 27 இல் இரத்தம் சிந்தாமல், உயிரை விலை கொடுக்காமல் விடியல் இல்லை என்பதைக் கூறி ஒரு பிள்ளை விழி மூடியது.

இங்குதான் உலக மானுடத்தின் தோற்றுவாய்க்குள் மானுடவியல் கோட்பாடு சொல்லும் ஜனனமும் மரணமும் விடுதலைக்கான

வினைப்பொருட்களாயின. இரத்தமும் சதையுமாகி சிவந்து கிடக்கும் தமிழீழ மண்ணில் சுடர்விடும் தியாக வேள்வியில் பல்லாயிரக்கணக்கான மாவீரர்கள் தமிழீழ விடுதலை எனும் தங்கள் கனவுகள் நனவாகும் என்ற நம்பிக்கையில்.....

எங்கள் தேசம் சுதந்திரப் பிரகடனம் செய்யப்படும் அந்தப் புனித நாளில் எங்கள் விடுதலைப் பேரொளி ஏற்றப்போகும் தமிழீழத் தேசியக் கொடி வானில் பட்டொளி வீசிப்பறந்து

வென்றதடா! ஈழம்
வென்று தமிழ்
பரணி பாடுதடா ஈழத்தில்

எனும் செய்தியைச் சொல்லும்போது அந்தக் காட்சியைக் காண்பதற்காகக் கல்லறைக்குள்ளே கண்மூடிக் காத்திருக்கின்றார்கள்.

விண்ணிலிருந்து பார்ப்போம் விடுதலையை என்று சொல்லிச் சென்றவர்களும், ஊர் தெரியாமல், உறவை அறியாமல், தலைவன் முகம் பாராமல், காற்றோடும் வானோடும் கடலோடும் கரைந்து காவியமானவர்களும் இந்த விடுதலையின் செய்திக்காய் காத்து இருக்கிறார்கள்.

தன் கருவறையைச் சுமக்கும் தாயகத்தில் வானைக் கிழித்து ஓசை எழுப்பும் நாதமணிச் சத்தம் விடுதலை பெற்றது தமிழீழம் என்பதை தங்களுக்கு வந்து சொல்லுமென்று எதிர்பார்த்துக் கொண்டும் தங்கள் கல்லறையில் நாங்கள் ஏற்றும் நெய் விளக்குச் சுடரில் தமிழீழ தேசத்தின் வரைபடத்தையும், தாயகக் கட்டுமானத்தையும் கண்டு களிப்படைந்து கொண்டும் இருக்கிறார்கள்.

மானம் காத்த எங்கள் மாவீரர் துயிலும் இல்லங்களை மாவீரர்கள் புதைந்த இடங்களாக நாம் எண்ணக் கூடாது. அவை உறுதியின் உறைவிடம், உன்னதமான மனிதப் பிறவிகள் மாவீரத் தெய்வங்களாகிய புனிதமான கோயில்கள் அவை. அந்தப் புனிதர்கள் துயில் கொள்ளும் அப்புனித இடத்தில் பூக்கள் வைப்பது மட்டுமல்ல எங்கள் கடமை. கூப்பிய கரங்களுடன் விழி சொரிவது மட்டும்தான் எங்கள் பணியென எண்ணுவதும் கூடாது.

எந்த நோக்கத்திற்காக, எந்த மண்ணின் விடுதலைக்காக அவர்கள் உயிர்த் தியாகம் புரிந்தார்களோ அதை உணர்ந்து அதற்காக அயராது உழைத்து இறுதி மூச்சுள்ளவரை போராடி தமிழீழத் தாயகத்தை மீட்டெடுத்து உயர்ந்த, உன்னதமான அந்த மாவீரர்களின் புனிதத் திருவடியில் காணிக்கையாக்குவதே நாங்கள் அவர்களுக்குச் செய்யும் வரலாற்றுக் கடமையாகும்.

**அலங்கார வளைவுகள், நெய் விளக்குகள், கற்பனையில் உருவாகும் கல்லறைகள், அதற்கான அலங்காரங்கள், கண்ணீர் மாலைகள் எல்லாம் எமது செயற்பாடுகளை நிலைநிறுத்துவதற்காக செய்யப்படும் காட்சிகளாகவும், சம்பிரதாயச் சடங்குகளாகவும் அமைந்து விடக் கூடாது.**

புனிதநாளான நவம்பர் 27 இல் ஒவ்வொரு தமிழனின் உள்ளத்திலும் தமிழினம் உயிர்த்தெழுந்த நாள் என்கின்ற உணர்வு உருப்பெற வேண்டும். ஆயிரமாண்டுகளானாலும் அழியாது தாயகக்கனவு என்ற தேசப்பற்றுடன் மாவீரர் நாள் விடுதலை பெற்ற மண்ணில் என்று நாங்கள் ஒவ்வொருவரும் சபதம் செய்து கொள்ள வேண்டும்.

இதையே இலக்காகக் கொண்டு நாங்கள் நமது பணிகளை தமிழரின் தாகம் தமிழீழத் தாயகம் என்ற முழக்கத்தோடு....

எம் பாதச்சுவடுகளை பாரெல்லாம் பதிப்போம் என்ற நம்பிக்கையோடு.....

*நள்ளிரவில் காதிலெழும் நாதமணிப்*
*பேரொலியில்*
*நாளை ஒரு பூ மலரும்*
*நல்ல சுடர் ஏற்றி வைத்து - நாங்கள்*
*தொழும் போதினிலே*
*நம்பும்!*
*நம் எதிரிச் சேனை வீழும்*
*பள்ளிகொள்ளும் வீரரது கல்லறையில் கண்*
*சொரிந்து*
*மணி ஒலிகள் ஒலி எழுப்பி*
*மாவீரர் புகழ் பாட*
*தலைவன் உரை முடிந்தவுடன்*
*தமிழீழம் மலர்ந்ததென்று*
*தரணியெங்கும் வானுயர்ந்த புலிக்கொடிகள்*
*தலை நிமிர்ந்து அசைந்து ஆட*
*உள்ளம் உருகி, உணர்வோடு*
*உத்தமர்கள் துயிலுகின்ற*
*கல்லறையில்*
*நாங்கள்*
*கார்த்திகைப் பூச் சொரிந்து*
*தேசியுத்தின் உயிரானவர்கள்*
*தேசத் தலைவனுடன்....செய்த பெரும்*
*ஈகமதை*
*பாடித் தினம் போற்றி*
*பாரெல்லாம்*
*தமிழ் வெல்ல*
*பணி செய்வோம்!*

**வில்லாதி வில்லங்கராசாவின் வில்லங்க விருதுகள்!**



# வில்லங்க விருதுகள்

வரைகலை: இரா. இலக்கியா



**எடுபட்ட மாப்பு விருது**

சமாதானம் எண்ட பெயரில எல்லாத்தையும் அழிச்சுப்போட்டு இப்ப இராணுவம் சுட்டது உண்மைதான் எண்டு அறிக்கை விடுற சொல்ஹைம், தமிழன் எவ்வளவு அடிச்சாலும் தாங்குவான் எண்டு நினைக்குறாரோ.?!!! இராணுவம் செய்த கொடுமையைப் பற்றித்தானே நாங்கள் இவ்வளவு நாளும் வாய்கிழியக் கத்துறம். இப்ப புதுசா உதை நீர் வந்து சொல்லித்தான் தெரியவேணுமே..? உம்மை வைச்சுத்தானே அமெரிக்கா எல்லாத் திட்டமும் போட்டது. இப்ப என்னடா எண்டால் ஒண்டுமே தெரியாத சின்னப் பாப்பாவாம் தான். முதல் அங்கால நிண்டு பெரிய கூத்தெல்லாம் போட்டீர்.. இப்ப என்ன திடீரெண்டு தமிழரின்ர பக்கம் காத்து வீசுது..? சரி,,என்னெண்டாலும் உம்மட பெயர் அடிக்கடி எங்கட வாயில உச்சரிக்கப்படுதப்பு..!



**எதுக்கும் உதவாத எலும்புச்சாமி விருது.**

இந்தியாவின் வரலாற்றிலேயே, மிக மோசமான பொம்மை பிரதமராக மன்மோகன் சிங்க் தான் இருக்கமுடியும். காங்கிரசின் கைக்குள் அகப்பட்டது அவரது பெரும்சாபம். தனித்து நின்று எந்த முடிவும் எடுக்கமுடியாத நிலை ஒருபுறம், வெளிநாடுகளின் அம்புக் கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாமல் தடுமாறும் நிலை மறுபக்கம். (நாட்டில என்ன நடக்குதெண்டு தெரிஞ்சால்தானே பதில் சொல்லலாம்).. அடுத்த பிரதமர் வாய்ப்பும் உங்களுக்குத் தான் ஐயா. ஏன் எண்டால் காங்கிரசிற்கு இப்படி ஒரு அமைதியான பிரதமர் கிடைக்கமாட்டார். அதைவிட இவரது கெட்டித்தனம் இப்பொழுது வெளிநாடுகளிற்கும் பரவியிருக்காம். அயர்லாந்திலிருந்து இந்தியாவிற்கு பயணம் செய்த அயர்லாந்தின் பிரமுகர் ஒருவர் அடித்த கிண்டலைப் பாருங்கோ... 'மன்மோகன் சிங் வாய்திறந்து கதைத்தால் சிலவேளை இந்தியாவின் ஊழல் ஒழியலாம்......!!!




**Yes we can வித்தகர் விருது.**

கடந்த ஆண்டில் இவரது தேர்தல் கோசமான Yes We Can என்பது பாரிய மாற்றத்தை உருவாக்கும் என்று பாரிய எதிர்பார்ப்பு இருந்தும் எல்லாம் அமுங்கிப்போச்சு. ஒசாமாவையும், கடாபியையும் கொல்லப்போறதைத்தான் மறைமுகமாக எழுவாய் தொக்கி நிக்கிற வசனமா, yes we can எண்டு சொன்னாரோ தெரியேல்லை. ஆயிரத்துக்கும் அதிகமான வங்கிகள் மூடப்பட்டமையும், வேலைவாய்ப்புப் பற்றாக்குறையால் இளைஞர்கள் போராட்டத்தில் குதித்தமையும் தான் இவரது வாழ்நாள் சாதனை. இப்ப இறுதியாக சிரியாவை நோண்டி விட்டிருக்கிறார். உப்பிடியே அராபிய தேசம் எல்லாத்தையும் அப்புறதுதான் அவரின்ர புதிய தேர்தல் கோசமாக இருக்கலாம். Yes we can (kill all the muslims in this wolrd)

தமிழீழம் என்பது தமிழ் மக்களின் அவா என்பதை நிரூபிக்கும் முகமாக வாக்கெடுப்பு நடாத்த வேண்டும் என்று கேட்கப்பட்ட போது மௌனம் காத்த ஐ.நா, முள்ளிவாய்க்கால் படுகொலை தொடர்பாக குற்றவாளிகளைத் தண்டிக்காத ஐ.நா, இப்பொழுது தன்னிடம் சிறிலங்காவின் மனித உரிமை மீறல்களுக்கான ஆதாரம் இருப்பதாகச் சொல்வது, இன்னும் வேதனையைத் தூண்டுவதாக அமைகிறது. இத்தனை ஆண்டுகளாக நாங்களும் இதைத்தானே சொல்லுறம் என்ற தமிழ் மக்களின் குரல் ஐ.நா விற்குக் கேட்டும் கேட்காதது போல் நடித்திருக்கிறது என்பதே உண்மை. இப்போதைய ஐ.நாவின் கரிசனைக்கும், அறிக்கைக்கும் பின்னால், அமெரிக்கா அழுத்தம் இல்லாமல் இல்லை. ஆனாலும், ராஜபக்சவைத் தண்டிப்பதோடு உங்களது வேலை முடியாது. தமிழீழம் என்பது பற்றி ஒரு வார்த்தையாவது நீங்கள் சொல்லியாக வேண்டும் மேன்மைதங்கிய ஐ.நா அவர்களே..!



**அலப்பறை.ஐ.நா விருது.**



# கொலம்பிய பேச்சுவார்த்தை - வெற்றி மக்களுக்கா, அரசாங்கத்துக்கா?

பூமிபுத்ரன்

ஐந்து தசாப்தகாலமாக கொலம்பியாவில் நடைபெற்றுவரும் ஆயுதப் போராட்டத்தை முடிவிற்குக் கொண்டு வரும் நோக்கிலான பேச்சுக்கள் ஆரம்பமாகியுள்ளன. நோர்வே நாட்டின் அனுசரணையுடன் ஆரம்பமாகியுள்ள பேச்சுக்கள் ஆயுத மோதலை முடிவிற்குக் கொண்டு வரலாம் என்ற எதிர்வுகூறல்கள் ஒருபுறம் வெளியிடப்பட்டு வரும் நிலையில், சிறி லங்காவில் நடந்ததைப் போன்று போராட்ட இயக்கம் அழிக்கப்பட்டுவிடுமா என்ற கேள்வி மற்றொரு சாராரால் எழுப்பப்பட்டு வருகின்றது. ஏனெனில், இரண்டிலும் நோர்வே அரசாங்கம் சம்பந்தப் பட்டுள்ளமையே இந்த நியாயமான சந்தேகம் உருவாகக் காரணமாகியது. நோர்வேயில் நடைபெற்ற பேச்சுவார்த்தைக்கான ஆரம்ப நிகழ்வின் முடிவில் நடைபெற்ற ஊடகர் மாநாட்டில் அயர்லாந்தைச் சேர்ந்த ஒரு ஊடகர் ஒருவர் அக் கேள்வியை நேரடியாகவே எழுப்பியிருந்தமை குறிப்பிடத் தக்கது.

உலகளாவிய ரீதியில் ஆயுதப் போராட்டங்களில் ஈடுபடும் போராட்ட இயக்கங்கள், ஏனைய நாடுகளின் அனுபவங்களைத் தமக்குப் பாடமாகக் கொண்டு செயற்படுவது வழக்கம். எனவே, சிறி லங்காவில் நோர்வே அனுசரணையுடன் நடைபெற்ற பேச்சுக்களின் முடிவில் விடுதலைப் புலிகளுக்கு எத்தகைய முடிவு ஏற்பட்டது என்பதை கொலம்பிய புரட்சிகர விடுதலை இராணுவம் நிச்சயம் கவனத்திற் கொள்ளும் என்பதில் சந்தேகம் இருக்காது.

முன்னைய அனுபவங்களில் இருந்து முடிவுகளை எடுப்பதாகக் கூறும் கொலம்பிய அரசுத் தலைவர் யுவான் மனுவல் சான்ரோஸ், பேச்சுக்கள் நடைபெறும் காலப் பகுதியில் போர் நிறுத்தத்துக்கு உடன்பட மறுத்துள்ளார். அதைப் போன்றே போராட்டக் குழுவின் பிரதித் தலைவரும் பேச்சுக்களுக்குத் தலைமை தாங்குபவருமான இவான் மார்க்குவேஸ், தாம் பேச்சுக்களில் கலந்து கொள்வதன் நோக்கம் சமாதானத்தைக் காண்பதே, எனினும் ஆயுதங்களைக் கைவிடப் போவதில்லை எனத் தெரிவித்துள்ளார். எனவே, பேச்சுக்கள் தொடர்பில் அவர்கள் தெளிவாக இருப்பது புலனாகின்றது.

அமெரிக்காவின் கடைக்கோடியில் அமைந்துள்ள அனைத்து நாடுகளையும் போலவே கடந்த நூற்றாண்டில் கொலம்பியாவிலும் ஏகாதிபத்திய சார்பான மக்கள் விரோத அரசே பதவியில் இருந்து வந்தது. அந்த அரசை ஆயுதப் போராட்டத்தின் மூலம் அகற்றி மார்க்சிய அடிப்படையிலான ஒரு மக்கள் அரசை அமைப்பதை நோக்கமாகக் கொண்டே 1964 ஆம் ஆண்டில் போராட்டம் உருவானது. 2008. மார்ச் 26 இல் மாரடைப்பால் மரணமான மனுவல் மருலாண்டா வெலெஸ் அவர்களாலேயே கொலம்பிய புரட்சிகர ஆயுதப் படைகள் - மக்கள் இராணுவம் என்ற அமைப்பு தோற்றம் பெற்றாலும், கொலம்பிய மக்களின் ஆயுதப் போராட்டம் அதற்குப் பல வருடங்களுக்கு முன்னரேயே கொலம்பிய கம்யூனிசக்



கட்சியால் ஆரம்பிக்கப்பட்டு விட்டது எனலாம். பாரிய விவசாயப் பண்ணைகளை அமைக்கும் நோக்குடன் சிறிய விவசாயிகளின் நிலங்கள் நயத்தாலும் பயத்தாலும் கவரப்பட்டு அவர்கள் வீதிகளில் விடப்பட்டமையே கொலம்பியாவின் ஆயுதப் போராட்டம் உருவாக மூல காரணம் ஆகும். சராசரியாக 50 ஹெக்ரெயார் பரப்பளவு கொண்ட பண்ணைகளை அமைப்பதற்காக தமது சொந்த நிலங்களை விட்டு விரட்டியடிக்கப்பட்ட விவசாயிகளின் எண்ணிக்கை 1961 ஆம் ஆண்டில் 40 ஆயிரமாக இருந்து 1969 இல் 10 மடங்கு உயர்ந்து 4 இலட்சமாக மாறியது. அதேவேளை, பயிர் செய்யக்கூடிய மொத்த நிலத்தில் 77 சத வீதம் இத்தகைய பண்ணை உடைமையாளர்களுக்குச் சொந்தமாக மாறியது.

இதேவேளை, பெருகிவரும் கம்யூனிச அபாயத்தைத் தடுக்க அமெரிக்காவின் உதவியை நாடியது கொலம்பிய அரசாங்கம். 1959 இல் அமெரிக்காவில் இருந்து சென்ற கிளர்ச்சித் தடுப்பு நிபுணர்களின் சிபார்சுகளுக்கு அமைய அமைக்கப்பட்ட ஊர்காவல் படையினரும், துணை இராணுவக் குழுக்களும் இன்றுவரை பாரிய மனித விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றமை குறிப்பிடத் தக்கது.

தமது சொந்த விவசாய நிலங்களைக் கேட்டு கோரிக்கை வைத்த மக்களுக்கு கிடைத்த பரிசு மரணம். எனவே, தற்காப்புக்காக அவர்களும் ஆயுதம் ஏந்த வேண்டி ஏற்பட்டது.

கொலம்பியாவின் அப்போதைய நிலையை சே குவேரா இவ்வாறு வர்ணிக்கின்றார். 1952 ஆம் ஆண்டு யூலை ஆறாம் திகதி அவர் தனது நாட்குறிப்பில் பின்வருமாறு எழுதுகிறார்.

நாங்கள் சென்ற நாடுகள் யாவற்றையும் விட இங்கே அதிக ஒடுக்குமுறை நிலவுகின்றது. துப்பாக்கிகள் சகிதம் காவல் உலா செல்லும் காவல்துறையினர் சில நிமிடங்களுக்கு ஒரு தடவை அடையாளக் காகிதங்களைக் காட்டுமாறு பணிக்கின்றனர்.... அங்கு சூழல் மிகவும் கொதிநிலையில் உள்ளது. ஒரு புரட்சி கனிந்து வருவதைப் போல் தென்படுகின்றது. கிராமப் புறங்களில் கலகங்கள் இடம் பெறுகின்றன, இராணுவம் பலமிழந்த நிலையில் உள்ளது. 60 ஆண்டுகளுக்கு முன்னர் சே நேரில் பார்த்ததைப் போலவே நிலைமைகள் தொடர்ந்தும் நீடித்து வருகின்றன. ஒரு விதத்தில் கூறுவதானால் நிலைமைகள் மேலும் மோசமடைந்திருக்கின்றன என்றே கூற முடியும்.

சுமார் 4 கோடி 70 இலட்சம் மக்கள் வாழும் கொணம்பியாவில் 70 வீதமான மக்கள் வறுமைக் கோட்டின் கீழ் வாழ்கிறார்கள். அதாவது வாழ நிர்ப்பந்தப் படுத்தப் பட்டுள்ளார்கள். இவர்களுள் 1 கோடி 20 லட்சம் மக்கள் கொடிய வறுமையில் வாடுகிறார்கள். இன்றுவரை மின்சாரத்தையோ, பொதுப் போக்குவரத்து வாகனங்களையோ காணாத கிராமங்கள் அந நாட்டில் அநேகம்.

அரை நூற்றாண்டு காலத்தில் ஆறு இலட்சம் உயிர்களைக் காவு கொண்ட யுத்தம் தொடர்ந்தும் மக்களைப் பலி கொண்ட வண்ணமேயே உள்ள நிலையில், போராட்டத்தில் ஈடுபடும் தரப்பினரும், அவர்களுக்கு அனுசரணை வழங்கும் தரப்புக்களும் குறிப்பாக பொதுமக்களும் சலிப்படைந்த நிலையில் உள்ளனர்.

ஆயுதப் போராட்டத்துக்கு வாய்ப்பற்றதாக உலகம் மாறி வருகின்ற சூழலில், அதனைப் புரிந்து கொண்டு போராட்டத்தை முடிவுக்குக் கொண்டுவர நினைத்த கொலம்பிய புரட்சிகர ஆயுதப் படைகள் - மக்கள் இராணுவம் இரண்டு வருடங்களுக்கும் மேலாக உத்தியோகப் பற்றற்ற பேச்சுக்களை நடாத்தி வருகின்றது. பேச்சுகளின் இணைப்பாளராகச் செயற்பட்டு வந்த அமைப்பின் தலைவர் அல்போன்ஸோ கனோ கடந்த வருடம் நவம்பர் மாதத்தில் அரச படைகளால் சுட்டுக் கொல்லப்பட்ட போதிலும், பொறுமை காத்து பேச்சு தொடர்கிறது. அதன் விளைவாகவே ஒஸ்லோவில் கடந்த அக்டோபர் 18 இல் வெளிப்படையான பேச்சுக்கள் ஆரம்பமாகின. தொடர்ந்து நவம்பர் 15 இல் கியூபாவின் தலைநகர் ஹவானாவில் அடுத்த கட்டப் பேச்சுக்கள் நடைபெறவுள்ளன.



ஐந்து அம்சங்களைப் பிரதானமாகக் கருத்தில் கொண்டு நடைபெறவுள்ள பேச்சுக்களில் முக்கிய விடயமாக நிலப் பங்கீடே இடம் பிடித்துள்ளது. ஜனநாயக அரசியல் நீரோட்டத்தில் பங்கெடுப்பதற்கான வாய்ப்பு, ஆயுத மோதல்களை முடிவிற்குக் கொண்டுவருதல், போதைப் பொருள் கடத்தலைத் தடுப்பது மற்றும் யுத்தத்தால் பாதிக்கப் பட்டவர்களுக்கான மறுவாழ்வு, நிவாரணம் என்பவை ஏனைய அம்சங்களாகப் பேசப்படவுள்ளன.

ஒன்றுக்கொன்று முரணான சித்தாந்தங்களை அடிப்படையாகக் கொண்ட இரண்டு தரப்புக்கள் பொது உடன்பாட்டை எட்டுவது என்பது கடினமானதே. அது மாத்திரமன்றி, அரசாங்கத்தின் தாங்கு சக்தியாக உள்ள பண்ணை உடைமையாளர்கள் தமது நிலங்களை விட்டுக் கொடுக்க முன்வருவார்களா என்பது மிகப் பெரிய கேள்வியாக உள்ளது. தவிர, அரச ஆதரவு துணை இராணுவக் குழுக்களை என்ன செய்வது, போராளிகளை அரச இராணுவத்தில் சேர்த்துக் கொள்வது என சிக்கல் நிறைந்த பல விடயங்கள் உள்ளன.

கொலம்பிய அரசாங்கத்தை பின்னணியில் இருந்து இயக்கும் அமெரிக்கா, போராட்ட இயக்கத்தின் அநுதாபிகளான கியூபா மற்றும் வெனிசுவேலா போன்ற நாடுகளின் நிலைப்பாடு என்பனவும் பேச்சு க்களின் வெற்றி தோல்வியில் செல்வாக்குச் செலுத்தும் என்பது புரிந்து கொள்ளப்படக் கூடியதே.

2010 ஆகஸ்டில் பதவிக்கு வந்த தற்போதைய அரசுத் தலைவர் சன்ரோஸ் ஆயுத மோதலை முடிவிற்குக் கொண்டு வருவதற்கு முன்னுரிமை அளிக்கப் போவதாகத் தெரிவித்து, உடனடியாகவே பேச்சுக்களையும் ஆரம்பித்திருந்தார். அதேபோன்று, தமது தலைவர் கொல்லப்பட்டபோது கூட ஆத்திரப் படாது, தொடர்ந்தும் பேச்சுக்களில் ஈடுபடுவதற்கான தமது விருப்பை கொலம்பிய புரட்சிகர ஆயுதப் படைகள் - மக்கள் இராணுவம் வெளிப்படுத்தியுள்ளது.

தமது பலம் ஒன்றே அரசாங்கத்தைப் பேச்சுவார்த்தை மேசைக்கு வரவழைத்துள்ளது, எனவே அந்தப் பலத்தை எக்காலத்திலும் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் எனும் புரிதல் போராட்ட அமைப்பிடம் இருப்பதைப் பார்க்க முடிகின்றது. அந்தப் பலத்தை பேச்சுவார்த்தைக் காலத்திலும், அதற்குப் பின்னரும் ஏதோவொரு விதத்தில் தக்க வைக்க மக்கள் இராணுவத்தால் முடியுமாயின் அவர்களது ஐந்து தசாப்த காலப் போராட்டத்தின் அறுவடையை மக்கள் சுவைக்க ஒரு வாய்ப்பு ஏற்படும் என்பது திண்ணம்.


NIORRA
Textiles & Jewellery
NJ
மலிவான விலையில்
உயர்ந்த ஆடைகள்
BollwoodStyle
Specialist in Wedding Saree & Shalwar Kameez
. சாறிகள்
. பஞ்சாபிகள்
. பாவாடைத்தாவணிகள்
. பட்டுவேட்டிகள்
. இமிரேசன் நகைகள்
. ரெடிமெட் ஆடைகள்
புதிய வரவு
சிறியவர் முதல் பெரியவர்கள் வரை அனைவருக்குமான ஆடைகளை
எம்மிடம் பெற்றுக்கொள்ளலாம்.
Dez.2012
Mage Sale in
Landau
Germany
Kaiserstr. 62-64
60329 Frankfurt
www.niorra.de
Tel. 069 2713 3944



# என்ன கொடுமை சரவணா!...

கல்லெறி வேலுப்பிள்ளை

வணக்கம் பாருங்கோ..
நலமாய் இருக்கிறியளே...?, மாவீரர் நாள் நெருங்கி வாறதால, எல்லாரும் அந்தப் புனித நாளை வரவேற்கிறதுக்கும், மண்ணுக்காய் மடிஞ்ச அந்தத் தெய்வங்களை நினைவு கொள்ளுறதுக்கும் உண்டான வேலையளில ஈடுபட்டுக்கொண்டு இருப்பியள். எல்லா நாடுகளிலையும் வழமை போலவே ஒருங்கிணைப்புக் குழுக்களின்ர நிர்வாகத்தில நிகழ்வு நடக்கிறது மனதுக்குப் பெரிய சந்தோசமாய் இருக்குது. போனமுறை மாதிரி, மரந்தாவுற ஆக்களின்ர அட்டகாசங்கள் பெரிசா இல்லை எண்டு நினைக்கிறன்.

ஆனால் வேற ஒரு வளத்தால இந்தவருசம் கொஞ்சம் தலையிடியள் கூடியிருக்கிற மாதிரிக்கிடக்கு. உது காலம் காலமாய் நடக்கிற கூத்து எண்டாலும், இந்தவருசம் மாவீரர்நாள் நடைபெறுகிற மாசமான நவம்பர் மாதத்தில இந்தக்கூத்துகள் நடக்கிறது தான் எனக்குச் சரியான சந்தேகமாய்க் கிடக்குப் பாருங்கோ.

விசயம் என்னெண்டு நேரடியாவே சொல்லுறனுங்கோ...., தமிழீழ விடுதலைப் போர் கடந்த பலவருடங்களாக நடைபெற்றுக்கொண்டு இருக்கிற நேரங்களில, தமிழீழ மக்கள் இடப்பெயர்வுகளையும், அழிவுகளையும் அடிக் கடி சந்திச்சவை. தமிழீழ விடுதலைப்புலிகளின்ர நிர்வாகம் நடைபெற்றுக்கொண்டு இருந்த காலப்பகுதியில, இடப்பெயர்வுகள் அழிவுகள் எல்லாத்தையும் மக்கள் தாங்கிக்கொண்டு, தொடர்ந்து விடுதலை நோக்கி நடந்தவை,. ஏன் எண்டால், என்ன இழப்பெண்டாலும் எங்களுக்கெண்டு ஒரு இயக்கம் இருக்குது.., அது எல்லாத்தையும் பார்த்துக்கொள்ளும் எண்ட பெரு நம்பிக்கைதான் பாருங்கோ. முள்ளிவாய்க்கால் மண்ணில, உலகச் சதியால விடுதலைப்புலிகளின்ர ஆயுதங்கள் மௌனிக்கப்பட்டு, படுகொலை தொடக்கம் கற்பழிப்பு வரை எல்லாத்தையும் சந்திச்ச மக்களுக்கு எந்த ஆறுதலும் பெரிசாக் கிடைக்கேல்லை. கிடக்குறதுக்கு அரசாங்கமும் விடேல்லை. பிறகு கொஞ்சம் கொஞ்சமா, எதோ அங்கின நாலு தகரம், அஞ்சாறு தீராந்தி எண்டு பிச்சைமாதிரி இந்தியா போட்ட ஒரு சில பொருட்களை வைச்சு, எங்கட சனம் வாழ்க்கையைத் திரும்பி ஆரம்பிக்குறதுக்கு முயற்சிக்கினம். சில கிறிஸ்தவ மதகுருமாரின்ர புண்ணியத்தால எதோ சாகாமல் மிஞ்சின உறவுகளோட எங்கட சனம் உயிர்வாழுதுகள். இதுகளைச் சாட்டா வைச்சு, புலம்பெயர் நாடுகளில இப்ப புதுவிதமான தொழில்முயற்சி ஆரம்பிச்சிருக்கிறாங்கள் ஒரு சில கில்லாடியள்....! உங்களுக்கு இலகுவாக விளங்குற மாதிரிச் சொல்லவேணும் எண்டால் புது பிசினசு ஆரம்பிச்சிருக்கினம் சில கோடாரிக்காம்புகள்...!

என்னெண்டாப் பாருங்கோ....., தாயக உறவுகளுக்கான கலைநிகழ்ச்சி எண்டு பெயரைப்போட்டுட்டு, சனத்தின்ர மனசை நெருடுறமாதிரி வசனங்களும் போட்டுடுவாங்கள், கைகுடுப்பம் வாங்கோ, கால்குடுப்பம் வாங்கோ, அள்ளித்தந்தால் சனம் அங்க துள்ளி வாழும், கண்ணீரைத்துடைச்சால் புண்ணியம், உறவுகளே ஓடியாங்கோ எண்டு எதோ சந்தையில நிண்டு கூவுற மாதிரி வியாபாரம் பண்ணுவாங்கள். பிறகு ஓடி ஓடி ஒவ்வொரு தமிழ்க்கடையளா விளம்பரம் கேட்டுக் கொண்டு திரிவாங்கள். சரி, எண்டு எங்கடை ஆக்களும் உதவி செய்யுங்கள். அங்க போய் நிகழ்ச்சியைப் பாத்தால், எதோ ஒரு குடும்பத்தின்ர நிகழ்ச்சி மாதிரியே நடக்கும். ஒராள் ஒலிவாங்கி கையை விட்டுப்போகாமல் இறுக்கிப் பிடிச்சுக்கொண்டு அண்டு முழுக்கத் திரிவார்,

அவரின்ர மகனோ மகளோ ஒரு பாட்டோட ஆரம்பிப்பினம், பிறகு அவருக்கு வால் பிடிக்கிற கொஞ்சப் பேரின்ர பிள்ளையள் எல்லாரும் சேர்ந்து நான் ரெடி நீங்க ரெடியா எண்டு சினிமாப் பாட்டுப்போட்டு மாங்கு மாங்கெண்டு ஆடுவினம். பிறகு விழாவை நடத்துறவரின்ர மகள் கவிதை வாசிப்பா,... அதில வைச்சே அவவுக்கு பொன்னாடை போத்தி கம்மாக்கரைக் கவிதாயினி எண்டு தகப்பன் பட்டம் குடுப்பார். பிறகு மகன் எதோ அங்கின கிடக்குற

வாத்தியம் எல்லாத்தையும் போட்டு உருட்டு உருட்டெண்டு உருட்டி ஏதோ வாசிப்பார். பிறகு அவருக்கும் சங்கீத சக்கரவர்த்தி எண்டு பட்டம் குடுபடும். பிறகு பாருங்கோ...., மேடை கிடைச்சால் போதும், அது பாடை எண்டாலும் பறவாயில்லை எண்டொரு கூட்டம் இருக்குத்தானே... அவையளுக்குக் கொஞ்சம் நிகழ்ச்சியள் குடுபடும். அவையளும் நிகழ்ச்சி நடத்துறவரை ஆகா ஓகோ எண்டு புகழ்ந்து அவருக்கும் ஒரு பன்னாடை.... சீ, பொன்னாடை போர்த்துவினம்... பிறகு அவர் கண்ணீர் மல்கி ஒரு நாடகம் ஒண்டு போடுவார். அதோட நிகழ்ச்சி முடிஞ்சிரும். சரியெண்டு கதிரையால எழும்பி வாசலுக்கு வரேக்கைதான் ஒரு உண்மை உறைக்கும்... தாயக உறவுகளுக்கான நிகழ்வு எண்டாங்கள்.. அந்தச் சனத்தைப் பற்றி ஒரு வசனமும் சொல்லேல்லையே...., சரி ஒருக்கா கேட்டுப்பார்ப்பம் எண்டுட்டு திரும்பிப்போனால்,.......; நிகழ்ச்சி நடத்தினவர், காதில கைத்தொலைபேசியை வைச்சபடியே அவரின்ர வாகனத்தில ஏறிப் பறந்திடுவார். பிறகென்ன, எங்களை நாங்களே திட்டிக்கொண்டு வீடு வரவேண்டியது தான்.

இவ்வளவும் அப்படியே கலப்படமில்லாத உண்மை பாருங்கோ.... கட்டாயம் உங்களுக்கும் இப்படி நடந்திருக்கும். என்ன கொடுமை எண்டு நானும் என்ர மண்டையைப் போட்டுப் பலமுறை உடைச்சிருக்கிறன். இவங்களுக்கெல்லாம் நாங்கள் மனிதாபிமானம் பார்க்கிறது சரியான பிழை பாருங்கோ. தாயக உறவுகளுக்கான உதவி எண்டால், இவ்வளவு காலமும் அதை ஒழுங்காச் செய்யுற ஒரு சில அமைப்புக்கள் இருக்குப் பாருங்கோ. விடுதலைக்காகப் போராடுற இனத்தின்ர சமூகப் பிரதிநிகளாக இவ்வளவு காலமும் செயற்பட்டவங்கள் யார் எண்டு நீங்கள் வடிவாத் தெரிஞ்சுகொள்ளுங்கோ. அதுதவிர்ந்த புது அலவாங்குகள் சேர்ந்து அடிக்கிற கூத்துக்கு நீங்கள் செய்யுற உதவி ஒரு காலமும் சனத்தைப் போய்ச் சேராது கண்டியளோ... , அது நீங்கள் இன்னும் அவங்களை ஊக்குவிக்கிறதாகத்தான் அமையும். கிட்டடியில நான் ஒரு நிகழ்வுக்குப் போயிருந்தன். அந்த நிகழ்வு அந்த நகர மக்களால நடத்தப்பட்டிச்சி து. சிற்றுண்டிச் சாலையில எவ்வளவு பணம் வந்தது, ஊக்குவிப்பாளர்களால இவ்வளவு பணம் கிடைச்சுது, எண்டு நிகழ்வு முடிவில அப்படியே கணக்கு வழக்குச் சொன்னாங்கள். அதுக்குப் பிறகு, தாயக உறவுகளுக்கு, உதவி செய்யுற ஒருவரின்ர கையில பணம் குடுக்கப்பட்டுது. அவரோட நானும் கதைச்சன்... ஏராளமான கை. கால்களை இழந்த எங்கட உறவுகளின்ர புகைப்படங்களை அவர் வைச்சிருந்தார். அதோட படிப்புச் செலவுக்குக் காசு தேவைப்படுற பிள்ளையளின்ர படங்களும் அவரட்ட இருந்துது. குடுக்கப்படுகிற காசுக்கான வங்கிப்பற்றுச்சீட்டு, பணம் பெற்றுக்கொண்டவரோட தொலைபேசி மூலமான உரையாடல் எல்லாத்துக்கும் அவர் ஒழுங்கு செய்து விடுறார்... மனசுக்கு சந்தோசமாயும் இருந்திச்சுது. இது தான் ஒழுங்குமுறை பாருங்கோ. ஊரில எல்லாரிட்டையும் காசு வாங்கி, தன்ர குடும்பத்துக்குப் பொன்னாடை போர்த்துறதுக்கு நீங்கள் ஏன் காசு குடுக்கிறியள்....? விருப்பம் எண்டா அவன் தன்ர காசில பொன்னாடை வாங்கி, நடுவீதியில நிண்டு தன்ர குடும்பத்துக்குப் போர்த்தட்டும்.. எதுக்கு தாயக உறவுகளின்ர பெயரை இழுத்து ஏமாத்திறாங்களோ தெரியேல்லை. உந்தப் பழியும் பாவமும் உவங்களைப் பரம்பரை பரம்பரையாத் தொடரும் கண்டியளோ..!

இப்ப கிட்டடியில, கனடாவில இசைஞானி இளையராஜா ஒரு இசைநிகழ்ச்சி நடத்துறார் எண்டு கேள்விப்பட்டன். அதுக்கும் தாயக உறவுகளுக்கான நிகழ்வு எண்டுதான் பெயர் வைச்சிருக்கினம். சரி அது கிடக்கட்டு,... போயும் போயும் அந்த நிகழ்ச்சியை நவம்பர் மாதத்திலேயே வைக்கவேணும். இளையராஜா மறந்தாலும், அதை ஒருங்கிணைக்கிற தமிழ்க்குடுமியளின்ர மூளை என்ன விறைச்சுப்போச்சே..? உவங்கள் எல்லாம் ஆடுற கூத்தைப் பாத்தால், கோத்தபாயவின்ர கொளுந்தனுகளோ எண்டு சந்தேகமாக் கிடக்கு. பின்ன என்ன பாருங்கோ..., மாவீரர்நாள் உலகத்தமிழரின்ர புனிதநாள் எண்டுறதை இவங்கள் அழிக்குறதுக்கு முயற்சிக்கிறாங்களோ எண்டு தான் யோசனையாய்க் கிடக்கு.

தயவுசெய்து ஆரெண்டாலும் நவம்பர் மாதத்தில கூத்தடிக்குறதை நிப்பாட்டுங்கோ. அதில சமரச ங்களுக்கு இடமில்லைப் பாருங்கோ. எப்பவும் தமிழர்கள் விழிப்பா இருக்கவேணும் கண்டியளோ. உங்க எல்லா இடத்திலையும், தமிழரின்ர தலையில மிளகாய் அரைக்கிறதுக்கெண்டே, ஒரு சில கூறு கேட்ட தமிழ்க் கூட்டம் அலையுது பாருங்கோ. எதுக்கும் அவதானமாய் இருங்கோ.... முடிஞ்ச தைச் சொல்லியிருக்கிறன்....

சத்தியம் தவறாத உத்தமன் போலவே நடிக்கிறார்
சமயம் பார்த்து பல வகையிலும் கொள்ளை
அடிக்கிறார்
பக்தனை போலவே பகல் வேசம் காட்டி பாமர
மக்களை வலையினில் மாட்டி
எத்தனை காலம் தான் ஏமாற்றுவார் இந்த
நாட்டிலே....?!!!
அப்ப வரட்டே..!


Orient
Textiles and Jewellery
2012 ம் ஆண்டுக்கான புத்தம்
புதிய வர்ணங்களில் குந்தம்
வேலை செய்த கோலம்.
காஞ்சி காஞ்சிபுரம்.
கோலம் மற்றும் பல வகையான
முகூர்த்தப் பட்டுச் சேலைகள்.
உத்தரவாத முத்திரை பதித்த
தரமான தங்கமான தங்க
ஆபரணங்கள் தரமான தேர்வில்.
சிங்கப்பூர் விலையில்
விற்பனையானகின்றது.
உரிமையாளர்: S.ஜெகதீஸ்
Königswall 16 (Am HBF)
44137 Dortmund, Germany
Tel: 0231 16 23 77
Fax: 0231 14 78 36
165, Upper Tooting Road
Tooting, London SW177TJ, UK
Tel: 0208 6823958
சிறுவர்களுக்கான
ஆடைவகைகளையும்
பெற்றுக்கொள்ளலாம்.

# சுப்பண்ணா சொன்னாருன்னா சுதந்திரம் வந்ததுன்னு... அப்பண்ணா நாம இன்னும் அடிமைகள்தானா?



- தமிழகத்திலிருந்து சீதாராமன்

எமது இந்தியத் திருநாட்டில் எந்த மூலையில் பார்த்தாலும் பொது மக்கள் படும் துயரம் எவர் கண்ணிலும் படுவதாகத் தெரியவில்லை. இந்நாட்டின் அளப் பெரும் வளங்களும் அவற்றால் கிடைக்கும் கோடிகளும் இங்குள்ள அரசியல் கேடிகளும் அயல்நாட்டு கம்பனிகளும் கூட்டுக் கொள்ளை அடித்தே நாட்டைப் பாலை முழுத் தேசத்தையும் இருளில் தவிக்க விடுகிறார்கள்.

மின்சாரம் இல்லாது தமிழ் நாடு இருளில் தவிக்கிறது ஆனால் தமிழ் நாட்டிலிருந்து தண்ணீரே தராத கர்நாடக மாநிலத்துக்குத் தடையின்றி நெய்வேலி அனல் மின் நிலைய மின்சாரம் போகிறது. தடுத்து அதனைத் தமிழ் நாட்டுக்குப் பயன்படுத்தும் வல்லமை தி.மு.க. அ.தி.முக கட்சித் தலைமைகளுக்குக் கிடையாது. கருணாநிதியை சக்காரியா கமிஷன் முடிவுகளும் ஜெயலலிதாவை சொத்துக் குவிப்பு வழக்கு களும் முழி பிதுங்கி மூச்சடைக்க வைக்கின்றன.

இக்கட்சிகளின் தொண்டர்களுக்கும் மாவட்ட ஊராட்சித் தலைவர்களுக்கும் தமது கட்சித் தலைமையைத் தட்டிக் கேட்டு நியாயம் தேடும் சுதந்திரம் கிடையாது. ஏனென்றால் சாதிவாரி நாட்டாமைகளும் கேடிகளும் இந்திய அரசியலில் 60 சத வீதமானோர் உள்ளனர்.ஆகையால் மக்களுக்கும் கட்சித் தலைமைகட்கும் இடையே பசிபிக் சமுத்திர இடைவெளி இருக்கிறது.இதுதான் இந்திய ஜனநாயகத்தில் வாக்காளர் பெற்றிருக்கும் அதிகாரம்.

மத்திய அரசு மந்திரிகளுக்கு அணுமின் நிலையங்களை ஒப்பந்தம் செய்வதன் மூலம் கிடைக்கும் இமாலாய கமிஷன் தொகை மக்களின் உயிர் பாதுகாப்பை விடவும் முக்கியம். எனவேதான் அமெரிக்காவுடன் அணு சக்தி ஒப்பந்தம் செய்ய பாராளுமன்றத்தில் கோடிகள் இலஞ்சமாகக் கொடுத்து நிறை வேற்றப் பட்டது.

சில்லறை வணிகத்தில் பன்நாட்டு முதலீடு மக்களின் பொருண்மியத்துக்கு ஆபத்தானது என்பது பொருளியல் மேதையான மன்மோகன் சிங்குக்கும் ப.சிதம்பரத்துக்கும் தெரியாதா என்ன? தெரிந்தும் தவறுகளைச் செய்யும் இவர்கள் ஆளுவோராக இருப்பதால் தேசபக்தர்கள்.

அணுக் கதிர் கசிவால் ஏற்படும் ஆபத்தை எண்ணி உயிர் பயத்தில் மக்கள் தமது பாதுகாப்புக்கு உத்தரவாதம் கோரி எதிர்ப்பதால் அப்பாவிப் பொது மக்கள் மீது தேசத் துரோகம் என வழக்குப் பதிவு செய்து முப்படைகளையும் ஏவி அடக்க முனையும் மாநில மத்திய ஆட்சியாளர் தேச பக்தர்கள் எனும் அபத்தம் காணப்படுகிறது.

மின்சாரத்தை வைத்தே ஆளும் தி.மு.க, காங்கிரஸ் தலைமையிலான ஐக்கிய முன்னணிக் கூட்டு தமிழகத்தில் மக்களை இருளில் தவிக்க வைத்து அடுத்த தேர்தலுக்கான அரசியலை முன்னெடுத்து வருகின்றன. சென்ற தமிழ் மாநில சட்டமன்றத் தேர்தலில் மக்களால் துடைத்து எறியப்பட்ட தி.மு.க. காங்கிரஸ் கட்சிகளுக்கு மாநிலத்தில் அ.இ.அ.தி.மு.கவை அடித்துத் துவைத்து காயப் போட்டால் அல்லாது அடுத்த மத்திய ஆட்சிக் கனவு கனவாகவே போய் விடும்.

மாநிலத்தில் ஜெயலலிதா திட்டங்களை மட்டும்தான் போட முடியும், நிறைவேற்ற நிதிக்கு யாரிடம் போக முடியும்? தானே புயலால் ஏற்பட்ட அழிவுகளுக்கே பிச்சையாய் கிள்ளிப் போட்டு கொண்ட மத்திய அரசு அனல் புனல் சூரியக் கதிர் மின்திட்டங்களுக்கா நிதி வழங்கும்?

தமிழக மாநில முதல்வர் குஜராத் மாநிலத்தில் இருந்து பெற முனைந்த மின்சாரத்தை மத்திய மின்வழங்கல் இணைப்பைக் கொடுக்காது மத்திய காங்கிரஸ் அரசு தடுத்து மாநில அரசியல் செய்கிறது. இவற்றைச் செய்வதன் மூலம் மத்தியில் ஆளும் தரப்புக்கு ஒரு கல்லில் 3 மாங்காய்களை வீழ்த்த முடியும்.

முதலாவது எப்படியும் தமிழகத்தில் அணுமின் நிலையங்களை ஏற்படுத்திச் செயற்பட வைத்து கமிஷன் பணத்தைத் தேடிக் கொள்வது. இரண்டாவது மக்களின் ஆதரவை ஜெயலலிதாவிடம் இருந்து முற்றாக அழித்து அவரை அரசியலில் இருந்து அகற்றி விடுவது. அப்போதுதான் தி.மு.க. காங்கிரஸ் உயிர் பெற முடியும்.

மூன்றாவது வரப் போகும் லோக் சபா தேர்தலில் தமிழக உறுப்பினரின் ஆதரவோடு மத்தியில் ஆட்சி யை அமைத்துக் கொள்வது. ஏனைய மாநிலங்களில் குறிப்பாக வட மாநிலத் தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி அட்ரஸ்ஸை தொலைத்து விட்ட நிலையில் தமிழகத்தை இழப்பது நிரந்தரச் சங்கு என்பது போல் ஆகிவிடும்.

தமிழகத்தின் ஆளுநராக இருப்பவர் ஆந்திராவைச் சேர்ந்தவர் ரோசையா. இவர் பழம்பெரும் காங்கிரஸ் தூண் என்பதற்கும் அப்பால் ப. சி தம்பரத்தின் நண்பரும் ஆவார். முன்னைய ஆளுநர் சுர்ஜித் சிங் பர்னாலா ஓய்வில் போகும் முன்னரே அவரது இடத்துக்கு ரோசையாதான் என முடிவு செய்யப்பட்டவர்.ஜெயலலிதாவின் தலைமேல் தொங்கும் கத்தியாக இவர் விளங்குகிறார்.

இப்போ புரிகிறதா ஜெ. ராஜீவ் கொலையில் மரண தண்டனை பெற்ற 3 தமிழ் அப்பாவி இளைஞர்களின் உயிர்களைக் காப்பாற்றும் எண்ணம் இருந்தாலும் கலைஞரே பயன்படுத்தாத அதிகாரத்தைப் பயன்படுத்தத் தயங்குவது ஏன் என்பது புரிகிறதா?

ஈழத் தமிழர் பற்றிய விடயங்களாயினும், கூடங்குளம் அணுமின் பற்றியோ, இன்னும் இவை அன்ன பிற மக்கள் நல விடயங்களைச் செய்வதில் அவர் படும் பாடு மற்றும் சொத்துக் குவிப்பு வழக்கு என்பன அவரை மக்களுக்கு எந்த வித நன்மையும் செய்ய விடாது இருட்டில் அடைத்து வைத்திருக்கின்றன.

அன்றாடம் மக்களிடையே பெருகி வரும் அவருக்கு எதிரான எதிர்ப்பு அலை எங்கே அவரது அடுத்த லோக் சபைத் தேர்தல் வெற்றிகளை இல்லாமல் செய்து விடுமோ என்ற கிடுக்கிப் பிடியில் சி க்கித் திணறுவது தெரிகிறது. நன்கு படித்தவரும் திறமைசாலியும் துணிச்சல் மிக்கவரும் என்பதால் புதுப் புதுத் திட்டங்களையும் 2023 மெகா திட்டப் புரட்சியையும் அறிவித்து மக்களுக்கு நம்பிக்கை ஒளி ஊட்டி வருகிறார்.

மக்களோ தாங்க முடியாத மின் வெட்டால் ஏற்படும் துயர் தாங்கமுடியாது காவல் துறையிடம் மின்சாரத்தைக் காணவில்லை தேடித் தாருங்கள் என முறைப்பாடுகள் செய்து காவல் துறையை திகிலடைய வைக்கின்றனர்.நாடு நள்ளிரவில் பெற்ற சுதந்திரத்தால் வருடங்கள் 60 வதைக் கடந்த நிலையிலும் சுதந்திர ஒளி இன்றித் தவிக்கிறது. எத்தனை தீபாவளிகள் வந்து போனாலும் தமிழகத்திலும் கூட சுதந்திரம் கிடையாது என்பதே யதார்த்தம்.

நடப்பது ஜெயலலிதா கருணாநிதி காங்கிரஸ் அரசியல் கட்சி மோதல் ஆனாலும் அடிமையில் தவிப்பது தமிழ் இனமே. தமிழன் தனக்கான அரசியலை தானே முன்னெடுக்க வேண்டிய தேவை காலத்தின் கட்டாயமாகிறது. புரட்சி க் கவிஞரின் கவிதை வரிகள் அடிதட்டு மக்கள் மொழியில் இருந்தாலும் இத்தனை ஆண்டு களாகியும் எந்தத் தட்டு மக்களையும் சிந்திக்க வைக்கவில்லை என்பது சதியா ? விதியா?

சுப்பண்ணா சொன்னாருன்னா சுதந்திரம் வந்த துன்னு எப்பண்ணா வந்ததுன்னே எனக்கும் தெரியல்லேன்னா அப்பண்ணா நாம இன்னும் அடிமைகள் தானா அண்ணா?

# ◀◀ வரைவுச் சித்திரங்கள்

தொகுப்பு: திரு. ஆ. புலேந்திரன்
















ஈழவிடுதலைப் போராட்டத்தின் பதிவுகள்...

**தொடர்–08**



# கொழும்புத்துறை

வண்ணை தெய்வம்

"கொழும்புத்துறை" என்றால் அது கொழும்பில் உள்ள துறைமுகத்தைச் சேர்ந்தது என எண்ணியிருந்த கிராமவாசிகள் பலர் இருந்திருக்கின்றார்கள்! ஆனால் பெரும்பாலான மக்களுக்குக் கொழும்புத்துறை என்றதும் ஞாபகத்திற்கு வருவது சைவப்பெரியார் யோகர் சுவாமிகளும்,இலந்தைக்குளம் மன்று வாழும் பெருமான் வினாயகமூர்த்தி ஆலயமும்தான்! இந்த ஆலயத்தின் தெற்கு வாசலில்த்தான் யோகர் சுவாமி அவர்களின் ஆசிரமம் அமைந்திருந்ததால் அந்த ஆலயமும் பிரபலமானதே.

கொழும்புத்துறை யாழ்ப்பாணத்தின் கிழக்கு எல்லையில் அமைந்துள்ள கிராமம் என்று சொல்லப்படும் ஒரு நகரமாகும்! இப்படிச் சொல்வதற்கான காரணம் ஒரு கிராமத்திற்குரிய எழில் வனப்புக்களையும், அதே நேரத்தில் ஒரு நகரத்திற்குரிய சகல வசதிகளையும் கொண்டிருந்தது.

யாழ்ப்பாண மாநகரசபையின் எட்டாம் வட்டாரமான இதன் எல்லைப்பகுதிகளாக மேற்கில் பாண்டியன்தாழ்வும், கிழக்கே அரியாலையும், வடக்கே நல்லூரும், தெற்கே பாசையூர், ஈச்சைமோட்டை ஆகியனவும் அமைந்திருந்தன. யாழ்ப்பாணத்திற்கு மிக அண்மையில் அமைந்திருந்த ஒரேயொரு துறைமுகம் இந்தத் துறைமுகம்தான். முன்பு கொழும்பிற்குச் செல்லும் பாய்மரக் கப்பல்கள் இந்தத் துறைமுகத்திலிருந்தே சென்றதனால் இதற்குக் கொழும்புத்துறை எனப் பெயர் வந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றார்கள்.

இவ் ஊர் கொழும்புத்துறை கிழக்கு, கொழும்புத்துறை மேற்கு என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கொழும்புத்துறை மேற்கு ஆனந்தன் வடலி வீதி, மற்றும் துண்டி வீதியுடன் முடிவடைகின்றது. அதிலிருந்துதான் கொழும்புத்துறை கிழக்கு ஆரம்பமாகின்றது. ஊரின் மத்தியில் இருந்து ஆரம்பமான பிரதான வீதி சின்னக்கடை, கன்னியாஸ்த்திரி மடம், சுண்டுக்குழி, பாண்டியன்தாழ்வு ஆகிய இடங்களின் ஊடாகக் கொழும்புத்துறை கிழக்கையும், மேற்கையும் இணைத்துச் செல்லும் பிரதான வீதியாகும். இவ் வீதியின் நீளம் சுமார் பத்து கிலோமீற்றர் இருக்கும்.

பூநகரி, கௌதாரிமுனை, வெட்டுக்காடு போன்ற ஊர்களில் கொழும்புத்துறையைச் சேர்ந்த பலருக்கு தென்னம்தோப்புக்களும், வயல்களும் இருந்ததனால் இவற்றின் விளைபொருட்களை ஏற்றி இறக்குவதற்கும், கொழும்புத்துறையைச் சேர்ந்த பலர் இவ் ஊர்களில் விதானையார், உடையார் போன்ற பதவிகளை வகித்ததனாலும் அன்றைய காலங்களில் கொழும்புத்துறை துறைமுகத்தில் இருந்தே பாய்மரக்கப்பல்களின்மூலமாக பயணங்கள் நடைபெற்றன. அத்தோடு கொழும்பிற்கான பயணசேவையும், வர்த்தகசேவையும் இத் துறைமுகத்திலிருந்தே இடம்பெற்றாலும் பிற்காலங்களில் கார், பஸ், புகையிரதம் போன்றவை பாவனைக்கு வந்தபின்னர் இல்லாமல்ப்போய்விட்டது. கொழும்புத்துறை கிழக்கு கடலும் கடல் சார்ந்த நெய்தல் பிரதேசமுமாக இருப்பதனால் இங்கு பெரும்பாலும் தென்னந் தோப்புக்களும், கற்றாழைகளும் நிறையவே காணப்படுகின்றது. இவற்றைத்தவிர இராவணன்மீசை, அடம்பன்கொடி, தாழை, போன்ற மரங்களும் செடிகளும் இருக்கின்றன.

அரியாலை மண்ணைப்போல கொழும்புத்துறை மண்ணும் வெள்ளை வெளேரெனப் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். யாழ்மாவட்டத்தில் உள்ளவர்கள் கல்வீடு கட்டும் தேவைகளுக்கு மண்கும்பான் மண்ணுக்கு அடுத்து இம்மண்ணையும் பாவிப்பார்கள். இவ் ஊரில் வாழும் மக்கள் பெரும்பாலும் வயலையும், கடலையும் நம்பியே வாழ்க்கை நடாத்துகின்றார்கள். தென்னம் பொச்சில் இருந்து கயிறு திரித்தல், துடைப்பம் தயாரித்தல், பாய் கடகம் பின்னுதல் போன்ற சிறு கைத்தொழில்கள் குடிசைக் கைத்தொழில்களாக இருந்தன.

கொழும்புத்துறை கிழக்கில் ஐயனார் கோவில், முத்துமாரி அம்மன் கோவில், வினாயகர் கோவில் ஆகியவன இருக்கின்றன. இவற்றில் முத்துமாரி அம்மன்கோவில் மிகவும் பிரசித்திபெற்ற ஆலயமாகும். காரணம் தொற்று நோயால் பாதிக்கப்பட்டவர்கள் இவ் அம்மனுக்கு பொங்கல் படையல் வைத்தால் நோய் தீரும் என்பது பெரும்பாலான மக்களின் நம்பிக்கை. இதனால் யாழ் குடாநாட்டு மக்கள் மத்தியில் இவ் ஆலயம் பிரசித்திபெற்றிருந்தது.

கொழும்புத்துறை வடக்கில் வயல்களுக்கு மத்தியில் இயற்கையான நீச்சல்க்குளமான "நெடுங்குளம்" இருக்கின்றது. இக் குளத்தில் குழிப்பதற்காகவும் நீச்சல் பழகுவதற்காகவும் யாழ்ப்பாணத்தில் இருந்துகூட இளைஞர்கள் வருவதுண்டு. இப்படி நீச்சல் பழகவந்து சிலர் உயிரைவிட்ட சம்பவங்களும் உண்டு. மழைகாலங்களில், இக் குழத்தைச்சுற்றி அல்லியும், ஆம்பலும் பூத்துக் குலுங்குகின்ற காட்சி மிக அழகாக இருக்கும்.

கொழும்புத்துறை மேற்கில் சுமார் 700 வருடங்களுக்கு முன்னர் நல்லூரை அரசாட்சி செய்து வந்த "விசய கூழங்கைச் சக்கரவர்த்தி" தென்மதுரையில் உள்ள 'திருங்கூர்" என்ற கிராமத்தில் இருந்து கந்தச்செட்டி,

கதிர்காமச்செட்டி, வேலுச்செட்டி என்பவர்களுடன் பல குடும்பங்களை அழைத்து வந்து கொழும்புத்துறையில் குடியமர்த்தியதாக கர்ண பரம்பரைக் கதையில் கூறப்படுகின்றது. இவர்களின் பரம்பரைதான் இன்று அங்கு வாழும் மக்கள் என பலராலும் நம்பப்படுகின்றது.

இங்குள்ள விநாயகமூர்த்திப் பிள்ளையார் ஆலயமும் மிகவும் பிரசித்திபெற்ற பழமையான ஆலயமாகும். அங்கு வாழ்ந்து 1901 சிவபதமடைந்த சுப்பிரமணியம் என்னும் சைவப் பெரியார் எழுதிய "சமரகவி" என்னும் நூலில் உள்ள ஆதாரங்களின்படி இவ் ஆலயம் 400 வருடங்களுக்கு முந்தயது என்றும் நல்லூரின் அரசகுமாரராக இருந்த எதிர்மன்னசிங்கன் என்பவனை போர்த்துக்கேயத் தளபதி பிலிப்டீ ஒலிவீரர் என்பவன் இக் கோவிலில் வைத்தே சிரச்சேதம் செய்தான் என்றும், அச்சமயம் அக் கோவிலின் குருக்களும் அரசகுமாரரைக் காப்பாற்றப் போராடியபோது அவருடன் சேர்ந்து வீரச்சாவை அடைந்ததாகவும். அறியத்தருகின்றது. அதுமாத்திரமல்ல போர்த்துக்கீயர்கள் அவ் ஆலயத்தை அப்பொழுதே தரைமட்டமாக்கி அழித்ததாகவும் அந் நூல் கூறுகின்றது.

தியாகரத்தின முதலியார் எழுதியுள்ள "சிறுப்புலம்" என்னும் நூலிலும் இதுபற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதன்படி ஆலயக் கட்டிடம் இல்லாமலேயே அந்த இடத்தில் மக்கள் வழிபட்டு வந்ததாகவும் பின்னர் சுமார் 125 வருடங்களுக்கு முன்னர் இவ் ஆலயம் "கணக்கர்" தில்லையம்பலம் குமாரசாமி, "சக்கடத்தார்" கந்தர்-ஆறுமுகம், "நொத்தாரிசு" அரியர் தில்லைநாதர் ஆகியோரின் முயற்சியால் புதுப்பிக்கப்பட்டு நிர்வாகிக்கப்பட்டு வந்ததாகவும், பிற்பாடு 1945ம் ஆண்டிற்குப் பின்னர் படிப்படியாக பல முன்னேற்றங்களை அடைந்து தற்போது புதுப்பொலிவுடன் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றது என்பதையும் அறியமுடிகின்றது.

கொழும்புத்துறை பற்றிய இந்த வரலாற்றுக் குறிப்புக்களையெல்லாம் பார்த்து வியப்படையும் நாம் இலங்கையின் தாயுமானவர் எனப் பலராலும் அழைக்கப்பட்ட யோகர் சுவாமிகளைப் பற்றிப் பார்ப்போம். மாவிட்டபுரத்தில் பிறந்த சுவாமி அவர்கள் கொழும்புத்துறையில் தனது வாழ்நாளின் பெரும் பகுதிகளைக் கழித்திருக்கின்றார். ஞானசக்தி நிறைந்த சுவாமி அவர்கள் வியக்கத்தக்க பல அதிசயங்களைச் செய்திருக்கின்றார். உள்ளூர் மக்கள் மட்டுமல்ல பல வெளிநாட்டவர்கள் பலரும் இவரைத் தெய்வப்பிறவியாக எண்ணி தரிசித்துச் செல்வார்கள்.

இலங்கையின் கடைசிக் கௌர்ணராக இருந்த ஆங்கிலேயப்பிரபுவின் மகனும், மற்றும் அமெரிக்கரான சற்குரு சிவாய சுப்பிரமணிய சுவாமிகள் ஆகியோரும் யோகர் சுவாமிகளின் பிரதான பக்தர்களாவார்கள்! இதில் சற்குரு சிவாய சுவாமிகள் ஏழு ஆண்டுகள்வரை இவரின் ஆச்சிரமத்தில் தங்கியிருந்தவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு கொழும்புத்துறைக்குப் பெயரையும் புகழையும் ஈட்டித்தந்த யோகர் சுவாமிகள் தனது 92ம் வயதில் 1964ம் ஆண்டு

இப் பூவுலகைவிட்டு சமாதியடைந்தார்.

கொழும்புத்துறை விநாயகர் ஆலயத்திற்குத் தெற்கே கொழும்புத்துறை இந்து மகாவித்தியாலயம் அமைந்திருக்கின்றது. இக் கல்லூரி 1874ம் ஆண்டளவில் பூநகரி மணியகாரராக விளங்கிய வெற்றிவேலு முதலியாரின் மகன் சிவகுருநாதபிள்ளையால் ஆரம்பிக்கப்பட்டது. இவர் இந்தியாவில் கும்பகோணத்தில் வன பரிபாலன இலாக்காவில் உயர் பதவி வகித்தவர். இப்பாடசாலையின் முதல் தலைமை ஆசிரியராகக் கடமையாற்றியவர் திரு.சுப்பையா வாத்தியார். இதன் கடைசித் தலைமை ஆசிரியராக இருந்தவர் பொலிகண்டியைச் சேர்ந்த திரு.அம்பலவாணர் வாத்தியார் ஆவார். அதன் பின்னர் இப்பாடசாலை மகாவித்தியாலயமாகத் தரம் உயர்த்தப்பட்டு அதன் முதல் அதிபராகக் கடமையாற்றியவர் பரம்-தில்லைராசா அவர்கள் தற்போது இக் கல்லூரியில் 500க்கும்மேற்பட்ட மாணவர்கள் கல்வி கற்கின்றார்கள்.

கொழும்புத்துறை மேற்கில் "துண்டி" என்ற பெரிய விளையாட்டு மைதானம் இருந்தது. பின்னர் அல்பிறட் துரையப்பா அவர்கள் யாழ் மாநகரசபையின் முதல்வராக இருந்த காலத்தில் அரசின் வீடமைப்புத் திட்டத்தின்கீழ் சிறிய சிறிய வீடுகள் கட்டப்பட்டு நிலமற்ற ஏழைகளுக்கு வழங்கப்பட்டது. இவ்வீடுகளுக்கு மேற்குப் பக்கத்தில் கடற்கரையை அண்டி ஒரு இந்து மயானமும் இருக்கின்றது.

தற்போது கொழும்புத்துறையில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியதாக யோகர் சுவாமிகளின் அஸ்த்தி வைக்கப்பட்டுள்ள ஒரு சிறிய கோவிலும், புங்கற்குளம. வீதியில் அமைந்துள்ள மகளிர் ஆசிரமத்தையும் சொல்லலாம். இவைதவிர 1934ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட கூட்டுறவு ஐக்கிய நாணயச் சங்கம் இன்றும் மக்களுக்கு சிறந்த பணியாற்றிக்கொண்டே இருக்கின்றது.

இவ்வளவு சிறப்புக்களையும் கொண்ட கொழும்புத்துறையின் மண்ணின் மைந்தர்களாக ஊருக்கும், மக்களுக்கு சேவையாற்றியவர்களையும் நாம் மறந்துவிடக்கூடாது. அமரர்களான டாக்டர் வெற்றிவேலு, பாராளுமன்ற உறுப்பினராக இருந்த அவரது மகன் யோகேஸ்வரன் ஆகியோர் பிறந்தது கொழும்புத்துறையில்த்தான். அடுத்து மாநகரசபை உறுப்பினராக இருந்த டாக்டர் மனோகரன், எந்திரவியலாளர் தெய்வகுமாரன், கல்வித்துறைப் பணிப்பாளராகக் கடமையாற்றிய திருமதி.இந்திரா நவரத்தினம், மாவட்டக் கல்வி அதிகாரிகளாக இருந்த அ.தங்கராசா, கனகசபை, மாநகரசபை உறுப்பினராக இருந்த தம்பு-கந்தையா ஆகியோருடன் பிரபல நாவலாசிரியர் செ.யோகநாதன், தினகரன் பத்திரிகையின் பிரதம ஆசிரியராக இருந்த திரு.சிவகுருநாதன் இப்படியாக இன்னும் பலர் கொழும்புத்துறை மண்ணுக்கு பெருமை தேடிக்கொடுத்துள்ளார்கள்.

அந்த மண்ணை வாழவைத்த பெரியவர்கள் பலர் அமரராகிவிட்டார்கள்! சிலர் மண்ணைவிட்டு இடம்பெயர்ந்தும், புலம் பெயர்ந்தும் சென்றுவிட்டார்கள்! ஆனால் கொழும்புத்துறை என்னும் மண் இன்னமும் வாழ்ந்துகொண்டுதான் இருக்கின்றது.



## வாங்கிக்கட்டும் மணிரத்னம்.

பாலசந்தர் மற்றும் மகேந்திரன் படங்கள் தவிர்த்து, 70 களில் தமிழ் சினிமாவில் பல குப்பையான படங்களை நான் தொடர்ந்து பார்க்க நேர்ந்ததால், கோபப்பட்டுத்தான் நான் சினிமா எடுக்க வந்தேன். அப்போது மற்ற இயக்குனர்களும் நல்ல படங்கள் எடுத்திருந்தால் நான் தமிழ் சினிமாவுக்கு வந்தே இருக்கமாட்டேன்," என்கிறார் பெருமையடிக்கிறார் மணிரத்னம். மணிரத்னம் எடுத்ததில் எது சொந்தப்படைப்பு, எது நல்ல படம் என்பதை அவரே விளக்கிச் சொன்னால்தான் உண்டு. தொடர்ந்து 4 தோல்விப் படங்கள் தந்தவர் இதே மணிரத்னம்தான். அனைத்துப் படங்களிலும் ஏதாவது ஒரு புராணத்தைக் கட்டிக் கொண்டு அழுவது தான் இவர் வேலை என்பது அனைவருக்கும் தெரிந்த விடயம்.

எழுதுபதுகளில் பல அருமையான படைப்புகள் வந்தன. எழுபதுகளில் இவர் குறிப்பிடுவது பாலச்சந்தரையும், போனால் போகட்டுமென்று மகேந்திரனையும் மட்டுமே.
அந்த காலகட்டத்தில் கொடிகட்டிப் பறந்த சிறீதரையோ பாலுமகேந்திராவையோ, ஏன் இன்றும் வியக்க வைக்கும் படைப்பான அவள் அப்படித்தான் தந்த ருத்ரையாவையோ விட்டுவிட்டது ஏனோ.. எழுதுபதுகளில்தான் பாரதிராஜா என்ற சினிமா புரட்சியாளன் அழுத்தமாக தடம் பதித்தான் என்பதும் இந்த இருட்டு வித்தகர் மணிரத்னத்துக்கு தெரியாமல் போனது ஏனோ?...

"மணிரத்னம் தன் படங்களின் நேர்மை குறித்த யோக்கியமான விவாதத்தை முதலில் தொடங்கி வைக்கட்டும். மற்ற படைப்பாளிகளை விமர்சிக்கும் தகுதி அவருக்கில்லை!" - இது மணிரத்னத்தின் பேட்டி குறித்து இன்றைய படைப்பாளி ஒருவரின் காட்டமான விமர்சனம்!

நியாயம்தானே...!

## கண்ணிவெடி என்ற பெயரில் ஈழக்கதை

தமிழீழத்தில் வாழும் ஈழத்தமிழர்கள் கண்ணிவெடிகளால் எப்படி பாதித்துக்கொண்டிருக்கின்றனர், என்பதை மையப்படுத்தி படத்தை உருவாக்கியுள்ளனர். ஒரு ஈழத்து இளம் பெண் கைகுழந்தையுடன் கண்ணிவெடி நிறைந்த இடத்தில் வந்து மாட்டிக்கொள்கிறாள். அவளை இலங்கை இராணுவ அதிகாரி, விடுதலைப்புலி உறுப்பினர் என்று சந்தேகப்பட்டு பிடித்து வைத்திருக்கின்றான். அந்த ஈழத்து பெண் கண்ணிவெடி நிலத்திலிருந்தும், அந்த இராணுவ அதிகாரியிடம் இருந்தும் எப்படி தப்பிக்கிறாள் என்பதே கதை. இதில் இராணுவ அதிகாரியாக டேனியல் பாலாஜியும், ஈழத்து பெண்ணாக நீலிமா ராணியும் நடித்துள்ளனர். அவுஸ்திரேலியா வாழ் தமிழர் ஒருவர் இத்திரைப்படத்தைத் தயாரித்துள்ளார். www.mithivedi.com.au என்ற தளத்தில் பணம் செலுத்தி இந்தத் திரைப்படத்தைப் பார்க்கமுடியும். Digital Cinema என்ற யேர்மனிய நிறுவனத்துடன் இணைந்து இந்தப் படத்தை இணையத்தில் வெளியிடுகின்றனர்.





## விஜய்யின் புதிய படம் இமானின் இசையில்..!

புதிய இயக்குனர்களுக்கு வாய்ப்பளித்து வரும் விஜய், புதிய இயக்குனர் நேசன் என்பவரின் கதைக்குப் பச்சைக் கொடி காட்டியிருக்கிறார். அத்தோடு முருகா என்ற திரைப்படத்தை இயக்கிவர்தான் இந்த நேசன். துணை இயக்குனராக, வேலாயுதம் திரைப்படத்தில் பணிபுரிந்த நேரத்தில் விஜய்யிடம் கதை சொல்லியிருக்கிறார். கதை பிடித்துப்போகவே 2013ஆம் ஆண்டிற்கான தனது திகதியை இப்பொழுதே ஒதுக்கிக் கொடுத்துவிட்டாராம் விஜய். இன்னமும் நடிகர்கள் தேர்வு நடைபெற்று வரும் இவ்வேளையில், இசையமைப்பாளராக இமான் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறார். தமிழன் திரைப்படத்திற்குப் பின் இமான் விஜய்க்காக இசையமைக்கிறார். கதை இன்னமும் தெரியாத போதும், விஜய் படமென்றவுடன் ஒத்துக்கொண்டுவிட்டேன் என்று பூரிக்கிறார் இமான்.

## காதலர் தினத்தன்று பொன் வசந்தம்!




கவுதம் மேனன் இயக்கத்தில் இளையராஜாவின் இசை விருந்தாக உருவாகியிருக்கும் நீதானே என் பொன்வசந்தம், வரும் பிப்ரவரி 14 -ம் தேதி உலகம் முழுவதும் பிரமாண்டமாக வெளியாகிறது. ஜீவா - சமந்தா நடித்துள்ள இந்தப் படம் தெலுங்கிலும் நேரடிப் படமாக உருவாகியுள்ளது.பாடல்கள் ஓரளவு வெற்றிபெற்ற காரணத்தினால் படத்தை தீபாவளிக்கு வெளியிடத் திட்டமிட்டிருந்தனர்.ஆனால் தீபாவளி மற்றும் பொங்கலுக்கு பெரிய படங்கள் மோதுவதால், இதனைத் தனியாகத் திரையிட எண்ணியிருக்கிறார் கௌதம் மேனன். அதனால் காதலர் தின விருந்தாகக் களமிறங்குகிறது நீதானே என் பொன்வசந்தம்.தெலுங்கிலும் அதே தேதியில் வெளியாகிறது. தெலுங்குப் பதிப்பில் நாயகனாக நடித்திருப்பவர் நானி.

# Milin Impex

*Asiatische Lebensmittel Groß und Einzelhandel*

ஜேர்மனி டோட்முண்ட் மாநகரில் தலைமுறை தலை முறையாக தரமான ஆசிய, ஆபிரிக்கா உணவுப்பொருட்களின் இறக்குமதியாளரும் மொத்த, சில்லறை விநியோகஸ்தர்களும்.



ஒவ்வொரு சனிக்கிழமையும்
இலங்கையிலிருந்து
வருவிக்கப்படும் உடன் மீன்கள்
குளிரூட்டப்பட்ட மீன்களையும்
மிககுறைந்த விலையில்
பெற்றுக்கொள்ளலாம்!

இந்த மலிவு விற்பனை
ஒவ்வொரு சனிக்கிழமையில் மட்டுமே!

**Tel: 0231 45 96 17 / 28**

அத்துடன் உங்கள் வசதிக்கு ஏற்ப நீங்கள் வீட்டில் இருந்தபடியே எம்மிடம் பொருட்களை மொத்தமாகவும் சில்லறையாகவும் ஓடர் செய்து பெற்றுக் கொள்ளலாம்!

எமது வாடிக்கையாளர்களுக்கு
தீபாவளி வாழ்த்துக்கள்

**Geschäftszeiten:**
Dienstag, Mittwoch, Freitag
10:00 bis 19:00 Uhr
Montag & Donnerstag
07:00 bis 17:00 Uhr
Samstags 09:00 - 16:00 Uhr

**Dortmund** நகரில்
Westendorfstr. 41
44287 Dortmund
Tel: 0231 459617/28
Fax: 0231 1815288

**Wuppertal** நகரில்
Aue – 94
42103 Wuppertal
Tel: 0202/29995869

**Lüdenscheid** நகரில்
Höchstr. 8a
58511 Lüdenscheid
Tel: 02351/9742131

